பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களின் சரிதை.



இஃது

அய்யம் பேட்டை

S. அப்துல் றஸாக் ஸாஹிப் அவர்களால்

உர்துவிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.



இதனை

சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்

அவர்களால்

தங்களது

ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸில்

அச்சிடப்பட்டது.

---

முதல் பதிப்பு.

1952



[அணா 10.

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்.

# ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களின் சரிதை.



இஃது

அய்யம் பேட்டை

S. அப்துல் ரஸாக் ஸாஹிப் அவர்களால்

உர்துவிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.



இதனை

சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்

அவர்களால்

தங்களது

ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

முதல் பதிப்பு.

1952



இதன் விலை] [அணா. 10

# ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ்



## பிறப்பும், குழந்தைப் பருவமும்

ஸூபியாக்களின் சரித்திர சம்பந்தமான விஷயங்கள் உள்ள வாறே கிடைப்பது அரிதாகும். அந்த மஹான்களைப்பற்றிய விஷயங்களை அவர்களது முரீதுகளும், விசுவாசிகளும் திரித்துக் கூறுவது சகஜமாகிவிட்டது.

சரிதாசிரியர்கள் அவ்விஷயத்தில் போதிய அளவிற்கு சிரத்தை எடுத்து அவர்களது குழந்தை பருவமுதல் வபாத்து வரையிலுமான விஷயங்களை தோரணமாக கொண்டுவந்து வரைய முன்வந்திருப்பரேயாகில், அதனால் பின் சந்ததியார்களுக்கு மிக்க அனுகூலமேற்பட்டிருக்கும்.

எந்த ஒளலியாவானவர் எந்த பாதுஷா உடைய காலத்தில் ஜனித்துள்ளார்? அவ்வமயம், உலகின் நிலை எவ்வாறிருந்தது? இஸ்லாத்தின் நிலைமையும் எவ்வாறிருந்து வந்தது? என்பதை குறிப்பிட்டிருத்தல் அவசியம். அத்தகைய முக்கிய விஷயங்களைத் தவிர்த்து அவர்களின் பழக்க வழக்க ஆசாரங்கள், கராமாத்துகள் இவைகளைப்பற்றியே வரைந்து விடுகிறார்கள். மௌலானா ஷம்ஸ்தப்ரேஸ் அவர்களுடைய விஷயங்களும் அத்தகைய வர்ணிப்புகளுக்குட்பட்டே இருந்து வந்தன.

மனாகிபுல் ஆரிபீன் என்ற கிதாபில் மௌலானா ரூம், மௌலானா ஷம்ஸ்தப்ரேஸ் இவர்களுடைய விஷயங்கள் நிறைய வரையப்பட்டிருந்தும், அவர்களின் பிறப்பிற்குரிய வருஷம் அறிந்து கொள்ள முடியவில்லை.

மௌலானா ரூம், ஷம்ஸ்தப்ரேஸ் இவர்களுடைய முதல் முலாகாத்து கூனியா நகரில் ஹிஜ்ரி 643-ல் ஏற்பட்டிருந்தது. அச்சமயம் மௌலானாவுடைய வயது (ஹிஜ்ரி 604 பிறப்பு வருஷத்திற்கு இணங்க) 38 பிராயமுள்ளதாக இருந்து வந்தது. அவ்வமயம

மௌலான பிரசங்கம் செய்வதிலும், மாணவர்களுக்குக் கல்வி புகட்டுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

இர்பான் சமுத்திரத்தில் மூழ்க வில்லையாயினும் ஷரீஅத்துடைய மன்ஸிலேவிட்டும் முன்னேறி இருந்தமையால் அவர்களுக்கு ஓர் போதகாசிரியரின் அவசியம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அவர் வயதில் மௌலானவைக் காட்டிலும் பெரியவராகவும், தேர்ச்சி பெற்ற அவர்களுக்கு வழிகாட்டியாகவும் இருந்து அவரை பயிற்சி அளிக்கத்தக்க அந்தஸ்தும் வாயப்பெற்றிருக்கவேண்டும் என்ற நிபந்தனை குறிக்கிட்டிருந்தது.

முஜாஹிதா, முஷாஹிதா சம்பந்தப்பட்ட தஸவ்வுப் உடைய உயர்தர வகுப்புகளில் தேர்ச்சி யடையவும், கீர்த்திப் பெறவும் குறைந்த பக்ஷம் ஒருவருக்கு 30, அல்லது 35 பிராயம் இருத்தல் அவசியம்.

மௌலான ஷம்ஸ்தப்ரேஸ், மௌலான ரூம் அவர்களை சந்தித்தபோது அவரது பிராயம் மௌலான பிராயத்தைக்காட்டிலும் இரண்டு நான்கு வருஷம் கூடக்குறைச்சலாக இருந்திருக்கக்கூடுமென ஏற்படுகிறது.

இந்த கணக்கிற்கேற்ப தாங்கள் ஹிஜ்ரி ஏழாவது நூற்றாண்டில் மூலாகாத்து நடைபெற்றது என்றும், அவ்வமயம் ஆசியா மைனரில் ஸுல்தான் முஹம்மத் கவார் ஜம்ஷா உடைய ஆட்சி தலைசிறந்து விளங்கிவந்ததென்றும், வரையப்பட்டிருக்கிறது.

அவ்வாட்சி குராஸான், இரான், காஷ்கர், இராக் ஆகிய ஸ்தலங்களைத் தாண்டி, அப்பாஸியா ஆட்சியை அழிக்கத்தக்களவிற்கு விஸ்தாரமடைந்திருந்தது.

“மனகிபுல் ஆரிபீன்” என்னும் நூலில் சொல்லப்பட்ட பிரகாரம் மௌலான ஷம்ஸ் தப்ரேஸுக்கு ஷைய்க் அபூபக்கர் தப்ரேஜி அவர்களிடத்திலும் இராதத் அருள் வாயப்பெற்றிருந்ததாகத் தெரிகிறது.

“நப்ஹாதுல் அன்ஸ்” என்ற நூலில் பாபா கமால் கஜ்ஜந்தி இடத்திலும் தாங்கள் அனுக்கிரகம் வாயப்பெற்றிருந்ததாக சொல்லப்பட்டிருந்த போதிலும் ஷேக் அபூபக்கர் தப்ரேஜி விடத்தில் முரீது வாயப்பெற்ற அத்தாட்சியே அதிகம் உறுதிப்படுகிறது.

எனவே ஹஸ்ரத் ஸுல்தான், மௌலானா ரூமுடைய பரிபூரண அனுக்கிரகம் பெற்ற புத்திரராவார். அவர் என்னுடைய தந்தையாரிடம், "நான் என்னுடைய சகல விலாயத்து பாக்கியங்களையும் ஷேக் அபூபக்கர் தப்ரேஜி அவர்களிட மிருந்து அடையப் பெற்றேன்" என்று கூறினதாக அறிவித்துள்ளார். முனாகிபுல் ஆரிபீன் என்ற கிதாபில் ஹஸ்ரத் ஸுல்தான் வலத் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

எனக்கு அல்லாஹ்வுடைய ஒளியானது பல்வேறு ரூபங்களில் சிறு பிராயத்திலேயே தென்பட்டு வந்தது. வானம், பூமிக்குரிய அரும் பெரும் ஸ்தலங்களையும், நான் நோக்கி வந்தேன். இந்த விஷயங்கள் சுலபமானவைகளன்று. இது என்னைப்போன்ற பிறருக்கும் தென்படலாம் என்பது எனது உத்தேசமாக இருந்து வந்தது. ஆனால், நான் என் விஷயங்களை அவர்களுக்கு எடுத்து உரைத்தபோது, அவர்கள் பிரமித்து விடுவார்கள். சிலர் அவற்றை நிராகரிப்பார்கள். அது கேட்டு ஆண்டவனுடைய அருளும் எல்லோருக்கும் ஒரே விதத்தில் வாய்ப்பெறவில்லை யென்றும் பரம இரகசியத்திற்குரியவர்கள் பிரத்தியேகமானவர்களே என்றும் நான் உணர்ந்து வந்தேன்.

ஷைய்க் அபூபக்கர் அவர்கள் அந்தரங்க இரகசிய விஷயங்களில் தம்காலத்தில் நிகரற்றவராக விளங்கிவந்தார். ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அந்த ஷைக் உடைய சம்பூரண அருள்களைப் பெற்று மிக்க உன்னத நிலையை அடைந்துள்ளார்கள். ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் குழந்தைப் பருவத்திலேயே ஷம்ஸ் பரிந்தா (பறக்கும் பட்சி) என பிரசித்திப் பெற்றிருந்தார்.

அவர்கள் புனித உள்ளத்தில் ஆண்டவன் பிரகாசமானது ஒளி வீசிக்கொண்டிருந்தமையால், அவர்களுக்கு என்னொரு முர்ஷிதை தேடவேண்டிய அவசியமாயிற்று. ஏனெனில், அவரது கோதிப்பின் வேகத்தை அடக்கி, அவரது தேவாசையின் புகையை வெளிப்படுத்தாமல் இருக்கவேண்டியதாயிற்று.

மௌலானா ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் தந்தையாரின் பெயர் அலாவுத்தீன் என்பதாகும். அவர்கள் ஓர் உத்தம குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

## மௌலானா ஷம்ஸ் தப்ரேஸ் மௌலானா ரூம் சமூகத்திற்கு வருதல்.

அல்லா உடைய ஆவலின் கொதிப்பு அனுதினமும் அதிகரித்துக்கொண்டே இருந்தது. அதன் பொருட்டு அவர்கள் ஆ... நலம் திருந்தார்கள். ஹஸ்ரத் மூஸா (அலை) நபியாக இருந்துங்கூட ஓர் அரிய ஒளியின் தரிசனைக்காக துடித்துக் கொண்டிருந்தது போலவே இவருடைய நிலையும் இருந்து வந்தது. கடைசியாக ஓர் நாள் அல்லா உடைய சார்பாக அவர்களுக்கு "நாம் உம்முடைய ஆவலுக் கேற்பதக்கதோர், நண்பரை கிடைக்கச் செய்வோமாகில் நீர் அதற்காக கொடுக்கப்போகும் காணிக்கையாது ?" என்று வினவப்பட்டது. அதற்கு அவர்கள் "இதோ! கொதிப்பு நிறைந்த என் சிரசே தன்னை அர்ப்பணஞ் செய்து கொள்ளதயாராயிருக்கிறது" என்று முறையிட்டார்கள்.

நீர் ரூம் தேசத்திற்கு விரைந்து செல்லும். அங்கு ஒருவர் நமது மகிமை மகத்துவத்தின் ஒளிவீசிக் கொண்டிருக்கிறார். அவரை சந்தித்து உம்முடைய வர்ணத்தில் அவரை வர்ணித்துக் கொள்ளும். அவருடைய சேர்க்கையால் உமக்கு பேரின்பம் அடையப்பெறும் என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அப்பொழுது அவர்கள் தப்ரேஜ் ஸ்தலத்தை விட்டும் கூனியாவுக்கு ஹிஜ்ரி 642 வது ஆண்டில் ஜமாதியுல் ஆகிர்மாதம் 26உ யன்று வந்து சேர்ந்தார்கள்.

அங்கு வந்ததும், ஓர் சத்திரத்தில் ஓர் வியாபாரி உடையை உடுத்தி தங்கலானார்கள். தங்கியுள்ள அறைக்கு பூட்டு இடப்பட்டது. ஜனங்களுக்கு தாம் ஒரு தர்வேஷ் என்று தெரியாதவாறு அவ்விதம் ஏற்பாடு செய்தார்கள்.

அவர்களிடத்திலோ பழைய பாயொன்றும் உடைந்த குவளை ஒன்றும் தலையணைக்காக செங்கல் ஒன்றும் இருந்தன. இவைகளைத் தவிர வேறு யாதொரு பொருளோ யில்லாதிருந்தது.

மௌலானா ரூம் அறிவிக்கிறார்கள்:— "நான் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களை முலாகாத்துச் செய்த பொழுது எனக்கு ஏற்பட்டுள்ள உணர்ச்சியை விவரிக்குமிடத்து, என் உள்ளங்கால் முதல் உச்சித் தலைவரை ஒரே அக்கினி எரிச்சலைப் போன்ற உணர்ச்சி இருந்து

வந்தது. நான் என்னுடைய தந்தையாராகிய ஹஸ்பஹாவுத்தீன் வலத் உடைய கோர்வையை வியாசத்தை ஓதி வருவதுண்டு.

மௌலானு ஷம்ஸ் ஒரு நாள் என்னை நோக்கி, நீங்கள் இனி இதை படிக்க வேண்டாம். அன்றும், பிறருடன் சம்பாஷிக்ககூடா தென்றும் சொன்னதன் பேரில் நான் அவ்வாறே நடக்க வேண்டிய தாயிற்று.

ஆனுல் என்னுடைய நண்பர்களில் சிலர் என் மௌனஞ் சாதித்தலைக்கண்டு வருந்தினுர்கள். ஏனெனில் அவர்கள் அல்லும் பகலும் என் மொழிகளைக் கேட்டு உற்சாக மடைந்து வந்தவர் களாகையால் அவர்கள் ஷம்ஸ்தப்ரேசை எதிர்க்கவும் அவர்களுக்கு தீங்கு விளைவிக்கவும் துணிந்து விட்டார்கள்.

ஒரு நாள் மௌலானுரும் ஒரு கிதாபை ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தபடியே தூங்கிவிட்டார்கள். அக்கிதாபின் பெயர் 'தீவானே முதனப்பா' என்பதாகும்.

அப்போது மத்ரஸா உடைய உலமாக்களுக்கிடை தர்க்கமும், விவாதமும் நடந்து வருவதாயும், "நீங்கள் ஆலிமாகயிருந்து பிராணிகளைப் போல் நடந்து கொள்ளுகிறீர்களே" என்று கூறி தாம் வெளியே வரமுயற்சித்த போது கண்விழித்துக் கொண்டதாகவும் கனவு கண்டார்கள். அவர்கள் கண் விழித்துப் பார்த்த போது மௌலானுஷம்ஸ் தமக்கெதிரில் நிற்பதைக் கண்டார்கள். அப்போது தாங்கள் மவுலானு உடைய ஆறுதலின்மையைக் கண்டு அதுயாவும் உலமாக்களுடைய குற்றத்தைச் சார்ந்ததில்லை என்றும் அக்கிதாபே அதற்குக் காரணம் என்றும் தெரிந்து கொண்டார்கள். அப்படியிருந்தும் மவுலானுவுக்கு அந்த கிதாபின் மேல் அளவு கடந்து ஏற்பட்டிருந்த பிரீதியின் காரணமாக அதை சிற்சில சமயங்களில் ஒளிமறைவாகவும், வாசித்தே வந்தார்கள்.

ஒரு நாள் அவர்கள் நித்திரையில் இருந்து வந்த சமயம் மவுலானு ஷம்ஸ் அவர்கள் முதபன்னு கவிஞரின் தாடியைப்பற்றி பிடித்து மவுலானுசமூகத்தில் கொண்டு வந்து நிறுத்தி "நீங்கள் அல்லும் பகலும் வாசித்து வரும் வாசகத்தின் கவிஞர் இவரே" என்று சுட்டிக்காண்பித்தபோது கவிஞர் கையைக் கட்டிக் கொண்டு "என்புத்தகத்தை மறந்து விட்டு, என்னை இவர்கள் கையை

விட்டும் விடுதலைச் செய்து விடுங்கள்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

அப்பால் மவுலானா ரும் அப்புத்தகத்தின் ஆராய்ச்சியைத் தவிர்த்து ரியாஸத்முஜாஹிதா, ஆகிய இர்பான் அலுவல்களில் ஈடுபட்டு விட்டார்கள்.

மவுலானாரூமை இவர்கள் அளவுகடந்து நேசித்து வந்தது போலவே அவர்களும் இவர்களை நேசித்து வந்தார்கள். இவர்களின் புகழ்ச்சியையும், மேன்மையையும் பற்றி அவர்களால் அநேக புகழ்ப் பாடல்களும் வரையப் பட்டுள்ளன.

ஒரு நாள் மத்ரஸா அறைக்கு முன்னால் மவுலானாஷம்ஸ் தப் ரேஸ் அவர்களும், அறைக்குள் மவுலானாரூம் அவர்களும் வீற்றி ருந்த போது பலர் மவுலானாவைப்பார்க்க வந்தனர்.

அப்போது மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ், நாங்களோ மவுலானா வுக்கு இடையில் இருந்து வருகிறோமே அதை யொட்டி நீங்கள் எங்களுக்காக ஏதேனும் காணிக்கை கொண்டு வந்திருக்கிறீர்களா? அப்படியானால் அதை எங்களுக்கு கொடுங்கள். நாம் உங்களை மவுலானா விடம் அழைத்துச் செல்லுகிறோம் என்றார்கள்.

அப்போது அவர்களுக்கிடை ஒருவர் எழுந்து நின்று, "நீங்கள் எங்களையா காணிக்கை கேட்கிறீர்கள்? மவுலானாவுக் காக நீங்கள் கொண்டு வந்துள்ள காணிக்கை யாது என்பதை முதலில் எங்களுக்குச் சொல்லுங்கள்." என்றார். "நான் என் சிரசை எனது அன்பினருக்காக அர்பணஞ் செய்துள்ளேன்" என்று விடை பகர்ந்தார்கள்.

மவுலானா ஷம்ஸ் மவுலானாரூமை மூலாக்கத்து செய்ததன் பயனாக தொழுகை நோன்பு அவர்களை விட்டும் அகன்றது. அவர் களின் பிரீதி யொன்றைத் தவிர இதர பிரீதிகள் யாவும் மறைந்தன.

ஹிஸாமுத்தீன் சல்பி மவுலானாரூம் இவ்விரண்டு நாதாக்கள் இடத்திலும் மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களின் செல்வாக்கு எது வரையில் வியாபித்திருந்தது என்பதை கவனித்து விட்டு அவர்களுக்குப் பின்னால் உள்ள பீர், முரீது ஆகியவர்களின் போக்கையும் சற்று கவனிக்க வேண்டி யிருக்கிறது.

பீர், முரீதுடைய வீட்டை ஒருவாறு துடைத்து விடவேண்டு மென்பதாக நினைக்கிறார். முரீது எட்டி யிருந்தே பீர் சாஹிபுக்கு சலாம் சொல்வது போதுமெனக் கருதுகிறார்.

பீர் சாஹிப் முரீதுடைய வீட்டிற்கு வந்து ஏதேனும் பொருளை விரும்பினாலோ முரீதுடைய கதி அதோ கதியாய் விடுகிறது. இவைகளுக் கெல்லாம் பிரதானக் காரணம் விசுவாச மின்மையும் அவநம்பிக்கையுமே யாகும்.

அன்றியும் அநேக பீர்மார்கள் பீருக்குரிய அந்தஸ்தையும் அடையாமலேயே தங்கள் மூதாதைகளின் பெயர் நாமத்தைச் சொல்லி வயிற்றை வளர்க்கிறார்கள். அவர்கள் பீரென்னும் புனித அந்தஸ்தை அடைந்த பின்னரும், முரீதுளுடைய வாயல்களுக்கே போகவர இருக்கிறார்கள். முரீதுகளிடத்திற்கு அவர்கள் அவ் வாறு போவது பாவமில்லையென நினைக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் தங்கள் யாதொரு பிரத்தியேகமான முரீ திடத்திற்குச் சென்று நல்லுபதேசங்களைப் புகட்ட போவாராகில் அதனால் பாதகமில்லை. ஆனால் தன் காலக்ஷேபத்தை உத்தே சித்தே அவரிடம் பீர் சாஹிப் போவதா யிருந்தால் அவர் தம் பீர் தொழிலை வியாபாரத் தொழிலாகவே கருதுகிறார் போலும். பண்டை காலத்தில் சஜ்ஜாத நிஷினி (குருபிரதி நிதித்துவம்) வமிச பரம்பர வழியை அடுத்திருந்ததில்லை யெனத்தெரிகிறது.

அதற்கு அத்தாட்சியாக மவுலானாரும் அவர்களையே எடுத்துக் கொள்வோம். அவர்களின் செல்வப் புதல்வர் ஹஸ்ரத் சுல்தான் வலத் ஒரு பெரிய நாதாவாக விளங்கி வந்தார்கள்.

ஆனால் மவுலானா அவர்கள் தம் புதல்வர் இருக்கையிலேயே ஹஸ்ரத் ஹிசாமுத்தீன் சல்பி அவர்களை தமது பிரதி நிதியாக நிர்ணயித்து விட்டார்கள்.

தற்காலையோ எண்ணிறந்த பீர்மார்கள் மார்க்க விஷயங்களைத் தெரியாதவர்களும் கூட மேற் சொன்ன முதாதைகளின் கீர்த்தி யாதரவில் தம்மைத்தாமே பீர் என்று சொல்லிக் கொண்டு கால க்ஷேபஞ் செய்து கொண்டு வருகிறார்கள்.

இதற்கேற்பவே அவர்களுடைய முரீதுகளுக் கிடையும் உள்ளன்பும், விசுவாச வாஞ்சையும் இருப்பதற்கில்லை.

இன்னமும் ஓர் விக்தையோ வெனில், தற்கால முரீதுகள் எப்படிப்பட்ட பீர்மார்கள் வேண்டு மென்கிருர்களாகில், அப்பீர் மார்கள் கண்மூடித் திறப்பதற்குள் செம்பை தங்கமாக மாற்றிவிட வேண்டும். பல்லாண்டுகளாக பிரிவினைக் குட்பட்ட மனுஷனுக் என்று சொல்லும்படியான பேரின்பக் காதல் ஒளியை ஒரு நிமிஷ நேரத்திற்குள் யாதொரு அற்பசொற்ப பிரயாசையு மில்லாமலேயே அடையப் பெற வேண்டும் என்பதே அவர்கள் நோக்கம்.

இப்படிப்பட்ட பீர்களை எங்கிருந்து பெறுவது? முரீதுகள் எவ்வாறு மாரிபத் அனுக்கிரகம் பெறுவது? இது வருந்தத் தக்கதே. இந்த நிலமை மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் காலத் திலும் இருந்து வந்ததாகவே யூகிக்க வேண்டி யிருக்கிறது.

மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் மஹா ஜனங்களுக்கிடை ஆற்றியதோர் சொற்பொழிவில் குறிப்பிடுகிருர்கள் :—"அரசர்கள் சீமான்கள் ஔலியாக்கள் ஆகியவர்களின் பந்திகளைச் சுற்றியும் அவர்கள் வாயல்களைக் கோலிக் கொண்டும் நாய்களைப் போல் வால்களை ஆட்டித் திரிகிறீர்கள். ஆனுலோ உங்களுக்கு வயிரார எங்கும் புசிகரணம் கிடைக்கவில்லை.

ஔலியாக்கள் உடைய பார்வை கீமியா (ரசாயண வித்தை) வைப் போன்றது. அது உள்ளத்தை துலக்கச் செய்வது என்று வாய்ப் பேச்சளவிலோ நீங்கள் உபதேசித்து விடுகிறீர்கள் ஆனல் நீங்கள் உங்கள் கஷ்டத்தை நிவர்த்திக்க முடியவில்லையே!

நீங்கள் எண்ணிறந்த மேதாவிகளிடம் சென்று அவர்களுக்குத் தொண்டு புறிந்து அளவிறந்த அனுக்கிரக பாக்கியங்களை அடைந்து விட்டதாக பறை சாற்றிக் கொள்ளுகிறீர்களாகிலும் உங்கள் உள்ளங்களிலோ இன்னமும் இருள் சூழ்ந்து நிற்கிறது. சுருங்கச் சொல்லில் பீர்மார்களுக்கிடை பெரும்பான்மையோர் முரீது தொழிலை வியாபாரத் தொழிலாக மேற் கொண்டிருக்கிருர்கள் எனச் சொல்ல வேண்டும்."

மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களிடத்தில் மவுலானு ரூம் உடைய அநேக முரீதுகளும், அடியார்களும் பொருமை கொண் டிருந்ததாகவும் பல நூல்களிலிருந்து அறியக்கிடக்கின்றது.

ஆயினும் நேர்ப்பார்வையும், பகைபொருமையின்மையும் படைத்தவர்கள், மவுலானு ஷம்ஸ்தப்ரேஸ் அவர்கள் உயரிய அந்தஸ்தை பாராட்டி அவர்களை மிக்க கண்ணியப்படுத்தியும், அவர்களுடன் மிக்க தாழ்மையுடனும் நடந்துகொண்டார்கள். அத்தகைய மனக்கண் கொண்டவர்களுள் ஹிஸாமுத்தீன் சல்பி அவர்களும் ஒருவர் ஆவார். இவர்கள் பின்னர் மவுலானுரும் அவர்களுடைய கலீபாவாகவும், பிரதிநிதியாகவும் இருந்து வந்தார்கள்.

ஒருநாள் மவுலானு ஷம்ஸ் அவர்கள் ஹிசாமுத்தீனைப் பார்த்து "அன்பா! வாய்ப்பேச்சளவில் அன்புபூர்த்தி அடைந்துவிடாது. நீனுக்காக பொருளையும் செலவிடவேண்டும். எனவே நீங்கள் மூத்தி ஸ்தானத்தை அடையவேண்டுமானுல் திரவியத்தை செலவு செய்யுங்கள்" என்று சொன்னுர்கள்.

அதைக்கேட்ட ஹிசாமுத்தீன் அவர்கள் உடனே வீட்டிற்குச் சென்று தன்மனைவியின் நகைகளை விற்ருர்கள். தோட்டத்தையும் அதேசமயம் விற்பனைசெய்து அவ்விரண்டு இனங்களினின்றும், கிடைத்த தொகையை மவுலானு உடைய சமூகத்தில் கொண்டு வந்து வைத்து கண்ணீர் சொரிந்தபடியே, "ஆ! என் அதிர்ஷ்ட வசத்தைப் பற்றி நானென்ன சொல்வது! என்சொத்தை அபார மகத்துவம் வாய்ந்த ஒரு பாதுஷாவானவர்கள் இச்சித்தாரே! இது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியை உண்டாக்குவதாகும்" என்று சொல்லி தேம்பித்தேம்பி அழுதார்கள்.

மவுலானுஷம்ஸ் அவர்கள் அதைக்கண்டு "ஹிசாமுத்தீன்! அல்லா உம்முடைய பதவிகளை மேற்கொண்டும் உயர்த்திவைப்பானுக! அல்லாஉடைய வீரர்களுக்கு எப்பொருளும் வேண்டியிருக்கவில்லை. அவர்கள் இருலோக பாக்கியங்களை விட்டும் துப்பறவடைந்திருக்கிருர்கள். இந்தரூபாய் எடுத்துச்செல்லும். இதை ஆண்டவன் பாதையில் செலவழித்து விடும்" என்ருர்கள்.

மவுலானுரும் அவர்கள் பேரப்பிள்ளை அதாவது சுல்தான் வலத்உடைய குமாரர் ஹஸ்ரத் சல்பி ஆரிப் என்பவர்கள் ரிவாயத்துச் செய்கிருர்கள்:— ஒருதடவை மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் மவுலானு ரூம் அவர்களிடம் "எவ்வளவு நல்ல பருவமும் மனேரம்மிய நாளாயும் இருந்துவருகிறது. இச்சமயத்தில் யாதொரு சௌந்தர்யவதிவாயப்பெற்ருல், நேரமும் நல்லபடியாக கழிந்து

விடும்; ஆத்துமாவுக்கும் இராஜக்கருவிகளுக்கும் அதன்மூலம் மகிழ்ச்சி உண்டாகிவிடும்" என்று சொல்லி முடிப்பதற்குள் மவுலானு அவர்கள் தம்வீட்டுக்கு ஓட்டமாகஓடி தம்மனைவியான கிமியகாதூன் என்பவரை கையைப் பிடித்து மவுலானுவுக்கு முன்கொண்டுவந்து நிறுத்தினர்கள்.

அதைக்கண்ட மௌலானு ஷம்ஸ் அவர்கள் "ஆ! சகோதரியை காதலியாக சொல்லமுடியாது. நான்சொன்ன மொழிகள் இவரை கிஞ்சித்தும் சார்ந்தவையன்று. நீங்கள் எவ்வளவு கொடுமைசெய்தீர்கள். இவரைகொண்டுபோய் விட்டுவிடுங்கள்! யாதொரு அழகிய பையனை இவருக்குப்பதிலாக கொண்டுவாருங்கள்" என்றார்கள்.

மவுலானு மீண்டும்போய் தன் குமாரனுகிய ஸுல்தான் வலதை அழைத்து வந்தார்கள். மவுலானு அவரைப் பார்த்ததும் புதல்வர்களுடன் மனே உல்லாசம் கூடாது. இவர்என் இருதயத்துண்டாவர். என் கண்களின் ஒளிவு இவரே. பருவத்தை அனுசரித்து இச் சமயம் எங்கிருந்தாவது கொஞ்சம் போன்ற சாராயத்தை கொண்டு வாருங்கள். அதிலிருந்து சுகானுபஇன்பம் அடையப்பெற்று விடும் என்று மொழியவே மவுலானு ஓடிப்போய் சாராயக் கடையிலிருந்து ஓர் குடம் நிறைந்த சாராயத்தை சற்று நேரத்திற்குள் கொண்டுவந்து வைத்துவிட்டார்கள்.

மவுலானு ஷம்ஸ், மௌலானு ரூம் உடைய இத்தகைய விசுவாசத்தைக் கண்டு திகைப்படைந்து அவர்களை தம் மார்போடு தழுவிக்கொண்டார்கள். "உங்களுடைய பொறுமைக்கும் உங்களுடைய தூய்மையான மனதின் விஸ்தரிப்புக்கும் எல்லே கிடையாது. உங்களுடைய புகழ்ச்சி மட்டுக்கடங்காததாகும்" என்றார்கள்.

மவுலானுரூம் அவர்கள் மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் மீது தம் உடல் பொருள் ஆவியை தியாகஞ்செய்யக் கூடியவர்களா இருந்தார்கள்.

---

## மவுலானு ஷம்ஸ் அவர்களை மவுலானு ரூம் பின்பற்றினதால் ஏற்பட்ட பலன்.

மவுலானுரூம் பகிரங்க மதக்கல்வியை போதித்து வந்தவர்கள். ஆனல் மவுலானு ஷம்ஸ் உடைய மூலாகத்துக்குப்பின் அதில் விசேஷமாறுதல் ஏற்பட்டு விட்டது.

ஆரம்பத்தில் அவர்கள் எங்கேனும் வெளியில் புறப்பட்டுச் சென்றாலும் அறிவாளர்கள் அவர்களை சூழ்ந்து செல்லு... அது பெரும் கம்பீரச்காக்ஷியாக இருந்துவந்தது. ஆனால் மவுலானா ஷம்ஸ் சேர்க்கைக்குப்பின் அவ்வாறு செல்வது அரிதாகிவிட்டது. இர்பானுடைய பாதையில் அவைகள் முற்றிலும் மாறுபட்டுவிடவே ஆலிம்கள் யாவரும் அவரைப் பற்றி குறைகூற ஆரம்பித்தார்கள்.

"ஓர் சாதாரண தர்வேஷ் உடைய வலையில் ஓர் அறிவாளர் எவ்வாறு சிக்குண்டு தம் அறிவை பாழக்கிக் கொண்டார்" என்று பலவாறு நிந்தித்துப் பேச ஆரம்பித்தார்கள்.

ஓர் நாள் மஷாயக் மார்களுடைய கூட்ட மொன்று கூடிற்று. அதில் சூபி யொருவர் எழுந்து சொன்னார்: அந்தோ! பஹாவுத் தீன் வலாபல்கி உடைய குமாரர் தம்முடைய கல்வி ஒழுக்கத்தை பாழாக்கிக் கொண்டது மல்லாமல் கற்கீர்த்திப் பெற்ற அவரது தந்தையின் பெயரையும் கெடுத்துக் கொண்டு தப்ரேஸ் வாசியான ஓர் மாந்தரீகக் காரனுக்கு வழிபட்டு நடக்க வந்ததானது விந்தையாயிருக்கிறது. குராசானுடையமண், தப்ரேஸ் உடைய மண்ணுக்கு கீழ்ப்பட்டு விட்டது என்று கூறினர்.

அதைக் கேட்ட மவுலானாரும் அவர்கள் "நீர் சூபியா? சூபியாகயிருந்தால் இத்தகைய பகைப் பொறாமைக்கு ஆளாவானேன்? மண்ணில் இறைவன் இரகசிய சக்தியை உண்டு பண்ணி இருந்தால் அதற்கு வழி பட்டு நடப்பதும் அவசியமே. எல்லாம் ஆண்டவன் அருள்."

---

## மவுலானா ஷம்ஸ் துயரமும், கூனியாவுக்குதிரும்பிப் போகுதலும்

ஜனங்களுடைய பலவிதமான துவேஷ மொழிகள் மேன் மேலும் அதிகரித்துச் செல்லவே, ஒரு நாள் மவுலானா ஷம்ஸ் ஒருவருக்கும் சொல்லாமலேயே கூனியா விலிருந்து திமஷ்க் நகரை நோக்கிப் போய் விட்டார்கள்.

மவுலானா ரூமுக்கு அந்த சங்கதி தெரிந்தது. அப்போது அவர்களும் அவர்களது தோழர்களும் அளவு கடந்து வருந்தினார்கள். அவர்களது உள்ளங்கள் ஒருவாறு கலங்கி விட்டன.

பொதுமக்கள் இனி நாம் மவுலானாரும் அவர்களுடைய நல்லுப தேசங்களைப் பெற்று மகிழ்ச்சி யுறுவோம் என்று நினைத்து சந்தோஷமடைந்தார்கள்.

ஒரு புறம் அவர்கள் அப்படி நினைக்க, மற்றொரு புறம் மவுலானாரும் அவர்கள் மனம் நொந்து பொதுமக்களோடு பேசுவதையே விட்டு விட்டார்கள். அவர்கள் தம்மிடம் வாலாகாதென்றும் ஆக்ஞாபித்து விட்டார்கள்.

மவுலானா, ஷம்ஸ் தப்ரேஜ் அவர்கள் பிரிவினையை யொட்டி அவர்களால் எழுதப்பட்டுள்ள பாரஸீக பாஷையிலுள்ள கவிகள் பசும் மரத்தில் எய்த ஆணி போல் மனதை கலக்க முறச் செய்கின்றன.

அவர்கள் சென்றபின்னர் மவுலானா உடைய கோஷ்டியினர் மீண்டும் அவர்களை தரிசிக்கவும், அவர்களது அரிய மொழிகளைக் கேட்கவும் தவித்துப் போனார்கள்.

அதன் பேரில் மவுலானாரும் சுல்தான் வலத் என்பவர்களை தேர்ந்தெடுத்து எவ்விதத்திலேனும் மவுலானாவை சமாதானப் படுத்தி அழைத்து வருமாறு ஏற்பாடு செய்தார்கள்.

அதன்படியே ஒரு தூது கோஷ்டி சுல்தானுடைய தலைமையில் அனுப்பப்பட்டது. இக்கோஷ்டியினர் திமஷ்க் நகரை அடைந்தனர்.

மவுலானா ஓர் ஆங்கிலபையனுடன் ஓர் சத்திரத்தில் உட்கார்ந்து 'சௌசர்' விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்பையன் அல்லாஉடைய திரு அடியார்களில் மறைந்திருந்தவன். தன் நிலைமை எதிர்க்காலத்தில் எப்படியாகப் போகிறதென்பது அவனுக்கே தெரியாதிருந்தது. மவுலானா ஷம்ஸ் தம் கஷ்பைக் கொண்டு அவனுடைய இரகசிய விஷயங்களை அறிந்து கொண்டதன் நிமித்தம் பெரும் பாலும் அவனோடு விளையாடி வந்தார்கள்.

மவுலானாவுடன் அவன் தன் விளையாட்டில் பல தடவைகளிலும் ஜயமடைந்து விட்டபடியால் அவ்விளையாட்டின் நிபந்தனைக் கேற்ப அவன் அவர்கள் கன்னத்தில் ஓர் அறை விட்டு

'பேஷ்' இத்திறமையை நம்பிபக்தயம் போட்டீரா என்று கர்ஜித்தான். பையனது அவமரியாதைத் தனத்தை கண்ணுற்ற சுல்தான் வலத் சகிக்க முடியாமல் வருந்தினர்.

உடனே அத்துடிப்புள்ள பையன், மேற் கொண்டு எவ்வாறு நடந்து கொள்ளப் போகிருனே என்றெண்ணி மவுலானு ஷம்ஸ் உடைய பாதங்களின் மேல் விழுந்து அழுகத் தொடங்கினர்கள். ஏனையர்கள், மரியாதையுடன் எதிரில் நின்று கொண்டிருந்தார்கள்.

ஆங்கிலப் பையன், மவுலானு உடைய இந்த கண்ணியத்தை கண்ணுற்று பிரமித்துப் போனன். மவுலானு ஷம்ஸ், சுல்தான் வலதை கைபிடித்து தூக்கி அவரது நெற்றியை முத்த மிட்டார். அந்நேரம் போல், மவுலானுரும் உடைய சுகசெய்திகளை விசாரித்தார்கள். சுல்தான் வலத் தாம் கொண்டு சென்ற நூக்க காணிக்கையை, சலாம் சொல்லியபின், மவுலானு விடம் சமர்ப்பித்து விட்டார். பிறகு அவர் மவ்லானு அவர்கள் சமூகத்தில் ஹஸ்ரத் அவர்களே! தங்களை நிந்தித்தவர்களோ போகட்டும். ஏனைய தங்கள் அடியார்கள் யாவரும் தௌபாச் செய்து தங்கள் பிழைகளுக்கு தங்களிடம் மன்னிப்புக் கேட்கிறுர்கள். தாங்கள் ஒருதடவை கூனியாவுக்கு விஜயஞ் செய்து, துடித்துக் கொண்டிருப்பவர்களுக்கு ஆறுதல் அளியுங்கள் என்று கேட்டுக் கொண்டதன் பேரில், மவுலானுஷம்ஸ், ரூம் பிரயாணத்தை மேற்கொண்டு விட்டார்கள்.

ஆங்கிலப் பையன், இஸ்லாம் தழுவி, மவுலானு விடத்தில் பையத் செய்து, "நான் என்னுடைய சொத்து முழுவதையும் கொண்டு தங்களுடன் வந்துவிட தீர்மானிக்கிறேன்" என்று சொல்லியதற்கு மவுலானு அவர்கள், நீர் இப்படிச் செய்ய வேண்டாம். லௌகிக அபிவிருத்தி யடைந்து உலக மக்களுக்கு நன்மை புரியும் என்று போதித்ததும் அப்பையன் மவுலானுவின் ஆசிர்வாதத்தைப் பெற்று தம் தேசத்தை நோக்கிச் சென்றுன்.

---

## மௌலானு ஷம்ஸ் கூனியாவுக்குத் திரும்பி வருதல்

கடைசியாக மவுலானு ஷம்ஸ் கூனியாவுக்கு வந்து மவுலானுரும் அவர்களைக் கண்டு கொண்டார்கள். ஏனையர்கள் வணக்கம்

புரிந்தனர்; தௌபாச் செய்து இனி மேல் மிக்க தாழ்மையுடன் நடந்து கொள்வதாக வாக்களித்தனர்.

காலநிலையே! நீ இந்த சேர்ப்பாட்டைக் கண்டு பொறாமையால் பற்றி எரியாதே (ஏனெனில்) நாள்பட்ட பிரிவினைக்குள்ளானவர்கள் ஒன்று கூடுகிறார்கள்; மேற்சொன்ன பொருளுக்குரிய பாடல்களின் முழக்கம் ஒருவாறு கர்ஜித்தது. (ஒரு கவிஞர்)

சமா என்னும் புகழ் பாடல்களின் சபைகள் கூட ஆரம்பித்தன. அங்குள்ள மக்கள் மட்டுமின்றி உயிரற்ற பொருள்களும் அதன் இன்பத்தை அடைய ஆரம்பித்தனர்.

இத்தகைய சந்தோஷச் சபைகளை முன்னிட்டு மவுலானாவும் அவர்கள் பல்வேறு பாரஸீக பாடல்களை பாடியுள்ளார்கள்.

ஒரு நாள் மவுலானா ஷம்ஸ் மத்ரஸாவில் வீற்றிருந்தார்கள். அச்சமயம் நகரிலுள்ள முக்கியஸ்தர்களும் பாமரர்களும் கூடியிருந்தனர். மவுலானாரும் அவ்வமயம் எழுந்து நின்று தாம் சுல்தான் வலாவின் அரிய விசுவாசங்களையும் அவரது ஒப்பற்ற சேவைகளையும், வரவேற்பதாகவும், அவரிடத்தில் தமக்கு அளவிறந்த சந்தோஷம் இருந்து வருவதாகவும், கூறி விட்டு மேற்கொண்டு சொன்னதாவது :—

வல்ல இறைவன் தனது மகத்தான பொக்கிஷங்களிலிருந்தும் எனக்கு 2 பொருள்களை அளித்துள்ளான். அவற்றில் ஒன்று மானிடத் தோற்றம்; இரண்டாவது சூபியானா கொள்கைக் கோட்பாடுகள்—மானிட உயர்வு அவனது சிரசை கொண்டதாகும். ஏனெனில் புத்தியும் மூளையும் அதிலேயே அடங்கி யுள்ளன. நான் அத்தகைய அரிய சிரசை மவுலானாவின் மீது அர்ப்பணஞ் செய்து அவரது அரிய சேர்க்கையின் பாக்கியத்தை அடைந்துள்ளேன். அப்படியிருந்தும் ஓர் அரிய பொருளை நான் சொற்ப விலையில் வாங்கிக் கொண்டதாகவே சொல்லத் துணிகிறேன். சூபியானா கொள்கையின் மேன்மை ரகசிய பொக்கிஷத்தைச் சார்ந்தது. அதை நான் சுல்தான் வலாவுக்கு கொடுத்து விட்டேன் என்ற விஷயத்தில் உங்களை எல்லோரையும் சாட்சியாக வைத்துள்ளேன்.

சுல்தான்வலா தன் ஆயுள் முழுவதையும் அதற்கான பிரயாசை யிலும் முஜாஹிதா துறையிலும் செலவழித் திருப்பாராயினும் அவர் அத்தகைய அரும்பெரும் ரகசிய பொக்கிஷத்தை அடைந் திருக்க முடியாது.

அதன் பலனாகவே நான் மீண்டும் பிரயாணத்தை மேற் கொண்டு இங்கு வர நேரிட்டது.

மவ்லானா ஷம்ஸ் மறுபடியும் போய் விட்டார்கள்.

இறைவன் உண்மை ஒளியை பார்க்க முடியாத துரதிஷ்ட வான்களும் அப்புனித ரகசியக் காக்ஷியை கண்ணுறும் படியான மனக் கண்ணற்றவர்களும் சதா ஒரே நிலைமையில் தான் இருக்கக் கூடியவர்கள். அவர்களுக்கு அவர்களது அக்தகாரம் எங்கிருந்து இடமளிக்கப் போகிறது அத்தியர்கள் மீது உத்தமர்களின் சேர்க் கையின் பலன் ஏற்படக் காரணமே இல்லை.

எனவே மவுலானா ஷம்ஸ், அவர்களுடைய நல்லுபதேசக் காக்ஷி மீண்டும் அவர்களை ஆத்திரத்துக் குள்ளாக்கியது. அவர் கள் மவுலானாவை பலவாறு நிந்தித்துப் பேச ஆரம்பித்தார்கள்.

மவுலானா தமது நேர் வழியில் அவர்களின் இடையூறுகளை லட்சியம் செய்யாது வந்தாராகிலும், அவர்களுடைய அனுதின கஷ்ட நிஷ்டூரங்களின் அபிவிர்த்தி அவர்களை அளவிறந்து நிர்பந்தித் ததின் பேரில் மவுலானா அவர்கள் கூனியாவி லிருந்து மீண்டும் போய்விடவே நேரிட்டது.

இத்தடவையிலுள்ள பிரிவின் காரணமாக மவுலானாவுக்கு ஏற்பட்ட வருத்தமும் ஆறுதலின்மையும் அளவு கடந்திருந்தமை யால் அவர்கள் ஒருகால் எங்கே பிராணபத்திற்குள்ளாய் விடுவாரோ என்று ஊழியர்கள் நினைத்து மவுலானாவுக்கு ஆறுதலளிக்கக் கூடிய வசதிகளைத் திரட்டுவதில் பெரிதும் முயற்சித்து வந்தார்கள். ஆனால் இத்தடவை மவுலானா அவர்கள் அந்த ஊழியர்களை முற்றிலும் நம்பாது நண்பரைக் கண்டு பிடிக்க தாமே புறப்பட்டு விட்டார்கள்.

இச்சந்தர்ப்பத்தில் அவர்கள் திமஷ்க் மைதானங்களையும் காடு களையும் சுற்றி யலைந்து அங்குள்ள மூலை முடக்குகளையும் செவ்வனே

அலசிப்பார்த்தார்களாயினும் அந்த விலையில்லா மாணிக்கத்தையோ அடைய முடியவில்லை.

இச்சமயத்திலும் அவர்கள் தங்கள் சஞ்சலத்தை துக்கப் பாடல்களின் மூலம் வெளிப் படுத்தி யுள்ளார்கள். அப்பாடல்களை பாடிப்பாடி அவர்கள் தம் துக்கத்தை மட்டுப்படுத்தி வரலானர். மவுலானு ரூம் அவர்கள் இருதியாக தாம் தேடிச்சென்ற கோஷ்டியுடன் மீண்டும் திரும்பி வருகிறார்கள்.

மவுலானு ஷம்ஸ் அப்பாலும் கூனியாவுக்கு விஜயம் செய்ததாக, "மனுகிபுல் ஆரிபீன்" "நப்ஹாதுல் அன்ஸ்" ஆகிய கிதாபுகளிலிருந்து தகவல் கிடைக்கின்றது. ஆனல், இத்தடவையில் அவர்கள் வருகையைப் பற்றிய சமாச்சாரம் துஷ்டர்களுக்கு எட்டவில்லை. அவர்கள் அப்பால், மவுத்தாகும் வரையில் மவுலானுவை விட்டுப் பிரியவுமில்லை என்பதற்குரிய சங்கதி பின்கண்ட சமாசாரத்திலிருந்து வெளியாவதாகும்.

## மவுலானு ஷம்ஷ்-ஷைக் அஹதுத்தீன் கிர்மானி

ஷைக் அஹதுத்தீன் கிர்மானி மிக்க உயர்தர பதவிவாய்ந்த மஹான் என்பதைக்குறித்து ஷேக்முஹைஹயத்தீன் இப்னுல் அரபி என்பவர்கள் தன்னுடைய கோர்வை நூலில் பின்வருமாறு வரைந்திருக்கிறார்கள்.

அவர்கள் எக்கோமும், இரகிய முஷாஹிதாச் செய்வதில் ஈடுபட்டிருந்தபடியால் அதன் பொருட்டு சிலர் அவர்களை வெறுத்து வந்தனர்.

ஒரு நாள் ஷைக் ஷஹாபுத்தீன் சுஹர்வர்தி உடைய சமூகத்தில் ஒருவர் ஷேக் அஹதுத்தீனைப் பற்றி பேசினர். அதற்கு அவர்கள் எனக்கு முன்னிலையில் நீங்கள் அஹதுத்தீன் உடைய பெயரை உச்சரிக்காதீர்கள். ஏனெனில் அவர் காபிரும், பித்அத் செய்பவரும் ஆவர் என்றார்கள்.

அஹதுத்தீனுக்கு அத்தகவல் எட்டியது. அப்போது அவர் "என்னுடைய பெயர், ஷேக் அவர்களின் திரு நாவினுல் உச்சரிக்கப் பட்டு போயிற்றே அதை விடவேறு பெருமை எனக்கு என்ன வேண்டும்" என்று மொழிந்தார்கள்.

"தாங்கள் என்னை கெட்ட மொழிகளைக் கொண்டு நினைத்திருக்கிறீர்களாயினும் நான் அதற்காக வருந்தவில்லை. வருந்துவதற்கு பதிலாக சந்தோஷமே அடைகிறேன். ஏனெனில் தாங்கள் அம்மொழிகளின் மூலமாவது என்னை நினைத்தீர்கள்"

மேற்சொன்ன பொருள் அடங்கிய கவிகளை ஷேக் அஹதுத்தீன் அவர்கள் அரபி பாஷையில் கவி பாடினார்கள்.

"நான் கோபப் பார்வையைக் கொண்டு பார்க்கப் பட்டால்தான் என்ன? அப்பார்வையின் தரிசனம் எனக்கு வாயப்பெற்றதற்காக நான் சந்தோஷப்படாமலிருக்க முடியாது" (மற்றொரு கவி) சமா என்னும் புகழ் பாடச்சபைகளில் அவர்கள் விசித்திரமான நடமாட்டங்களை மேற்கொண்டு வருவார்கள்.

பக்தாத் கலீபாவுக்கு அதைப் பற்றிய தகவல் எட்டியபோது அவரும் 'சமா' சபை யொன்றை நடத்த ஏற்பாடு செய்தார். அச்சபையில் அஹதுத்தீனும் கலந்துகொண்டார். கலீபாவுக்கு அவரது நடமாட்டங்களின் காரணத்தால் அவர்மீது ஆத்திரம் ஏற்பட்டிருந்ததாயினும் அவரது கவிகளின் கருத்தை விளங்கிய பின்னர் கலீபாவும் தன் குமாரருடன் திறந்த சபையிலேயே அன்னாரிடம் தம் தவறுதலுக்காக மன்னிப்புக்கேட்டு அவரது முரீது கோஷ்டியில் சேர்ந்து கொண்டார்.

மவுலானா ஷம்ஸ் அவர்கள் சுற்றுப்பிரயாணத்தில் மிகுந்த ஆவல் கொண்டிருந்தார். அவர் ஒரு பக்கமேனும் சிறிது காலத்திற்கு நிலையாகத் தங்குவதில்லை. அதன் நிமித்தம் பொதுமக்களுக்கிடை அவருக்கு பறக்கும் பறவை யென பெயர் வழங்கப்பட்டு வந்தது.

ஒரு தடவை ஷம்ஸ் அவர்கள் பக்தாத்நகரை அடைந்தபோது அங்கு ஷேக் அஹதுத்தீன் கிர்மானியை சந்திக்க சந்தர்ப்பம் வாய்த்தது.

"ஷேக் தங்கள் சங்கதி எப்படி?" என்று விசாரித்தபோது, அவர்கள் நான் தண்ணீர்ப் பாத்திரத்தினுள் சந்திரனுடைய முஷாஹிதாச் செய்கிறேனென்று பதிலளித்தார்கள்.

"பிடரியின் மேல் சிரங்கு புறப்பட்டிருந்தால், இரண வைத்தியரிடம் சென்று சிகிச்சை செய்வித்தல் வேண்டும். இல்லையேல்

ஓ அசட்டைக்குட்பட்டவரே! உண்மையான சந்திரன் வானத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கும்போது நீர் அதை நோக்கி வானத்தின் புறமாய் தலை எடுத்து ஏன் பார்க்கலாகாது?" என்று மொழிந்தார்கள்.

அதைக் கேட்ட ஷேக் அஹதுத்தீன், "தாங்கள் என்னை தங்கள் சேவையில் ஈடுபடுத்திக்கொள்ளுங்கள். நான் அதன் மூலம் தங்கள் கிருபானுக்கிரகங்களுக்கு உரிமை வாய்ந்து விடட்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

"அப்படியானால் என்னுடைய சில நிபந்தனைக்கு உட்பட வேண்டியதாகுமே. அவற்றுள் முதலாவது நிபந்தனை யாதெனில்:— பக்தாத் கடைத்தெருவிலிருந்து எனக்காக குடிக்கக் கொஞ்சம் சாராயம் விலைக்கு வாங்கிவந்து என்னுடன் குடிக்கவேண்டுமே"

"என்னை மன்னிக்கவேண்டும்" (கிர்மானி)

"சரி, நீர் குடிக்காவிட்டாலும் எனக்காகவாவது கொண்டு வந்து கொடும்" (ஷம்ஸ்)

"இதுவும் என்னால் முடியாது" (கிர்மானி)

"போகட்டும் நான் குடிக்கும் போது என் பக்கத்தில் உட்கார்ந்தாவது அதைப் பார்த்துக்கொண்டிரும்" ஷம்ஸ்.

"அதுவும் முடியாத காரியம்" (கிர்மானி)

அப்பொழுது ஹஸரத் ஷம்ஸ், "ஓ தந்திரமுள்ள நரியே! வீரதீர ஆண்டவனது அடியார்களுக்கு முன்னாலிருந்து எட்டி ஓடு. நீ உன் கப்பைை அடக்கி ஆளும் துறையில் இவ்வளவு தத்துவமும், வாயப்பெற்றிராவிடில்: நீ என்னுடைய சேர்க்கையில் உள்ள செயல்களைக்கண்டு எவ்வாறு பொறுத்துக்கொள்ளப் போகிறாய்? பாழ் உலகம் உனக்கு பிரியமா யிருந்தால் நீ இவ்வுலகில் ஜனித்ததற்குரிய நோக்கந்தானென்ன? நான் உன்னை முரீதாக்கிக் கொள்ள உடன்படமாட்டேன்" என்றார்கள். இம்மொழிகளைக் கேட்ட கிர்மானியின் மனக்கண்ணுக்கு முன்னைவிட அதிக ஒளி உண்டாயிற்று.

## மவுலானா ஷம்ஸ் மனைவி கீமியா காதூன்

மவுலானா ஷம்ஸ் தன்னந்தனியாக கஷ்டத்துடன் காலங்கழித்து வருவதை முன்னிட்டும் அவருக்கு விவாஹம் செய்யப்பட்டால்

அவர் கூனியாவிலிருந்து வெளியிற் செல்லமாட்டார் என்பதைக் குறித்தும் மவுலானுரூம் ஷம்சுக்கு விவாகம் செய்து வைக்க எண்ணினர்.

மவுலானு ரூமிடத்தில் அவரால் வளர்க்கப்பட்டு வந்த ஒரு பெண் இருந்து வந்தது. அவள் பெயர் கிமியா என்பதாகும்.

மவுலானு ஷம்ஸை அவளுடன் நிக்காஹ்செய்து வைத்த பின்னர் தன் கட்டிடத்தின் எல்லைக்குள்ளாகவே அவரது வாசத்திற்காக ஓர் கூடாரத்தை அமைத்துக் கொடுத்தார்கள்.

மவுலானு ரூமின் பெரிய புதல்வரின் பெயர் அலாவுத்தீன் சல்பி யென மேலே கூறப்பட்டு வந்ததல்லவா? அவர் மவுலானு ஷம்ஸை பகைத்து வந்த சிலரின் சேர்க்கைக் காரணத்தால் தானும் அவரைப் பகைத்துக் கொண்டார்.

அவர் தம் வீட்டை விட்டு வெளியிற் செல்லும்பொழுது ஹஸ்ரத் ஷம்ஸை தூண்டி அவரை ஹிம்சிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் அவரது கூடாரத்திற்குள் நுழைந்து அதன் வழியே செல்ல தீர்மானித்துக் கொண்டார்.

மவுலானு அவர்கள் அலாவுத்தினை அவ்வழியே செல்லுவது சரியல்ல வென்று பலதடவைகளில் தடுத்தார்கள். ஆனால் சுயேச்சை படைத்த அவர் அதற்கு மாருகவே நடந்துகொண்டது மல்லாமல் ஜனங்களிடத்தில் மவுலானுவைக் குறித்து அவதூராகபேசவும், அவரது மனைவியைப்பற்றி "அடுப்புக்கு நெருப்புவாங்க வந்தவள் வீட்டுக்காரியாகிவிட்டாள்; பற்ருக்குறைக்கு கூடாரத்தையும் அடித்துக்கொண்டாள்; அவள் கணவர் தாம் வீட்டுச் சொந்தக்காரர்போல் வீட்டுக்குள் வருவதாக இருந்தால் முதலில் கூப்பிட்டு வரவேண்டு மென்கிருர்" என்று பலவாறு சொல்ல ஆரம்பித்ததும் ஷம்ஸ் பகைவர்களுக்கு அவர்களின் குரோதவளர்ச்சிக்கு மேற் கொண்டும் சந்தர்ப்பம் வாய்த்துவிட்டது.

ஒன்றுக்குப்பின் ஒன்ருய் கஷ்டசங்கடங்கள் வளர வளர மவுலானுவால் சகிக்கமுடியவில்லை. அவர் இருந்தார்போலிருந்து கூனியாவை விட்டும் மறைந்துவிட்டார்.

மஜ்கிபுல் ஆரிபீன் என்ற கிதாபில் மவுலானு ரூம் எழுதுவதாவது:—

கீமியாகாதூன் யாதொரு விஷயத்தில் மவுலானுவுடன் அதிருப்த்தி கொண்டு மராம்பாக் என்ற ஸ்தலத்திற்கு சென்று விட்டார்.

"நான் அதைக்கேட்டதும் சில ஸ்திரிகளை அவரை அழைத்து வருமாறு அங்கு அனுப்பிவைத்து நானும் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களிடத்திற்கு புறப்பட்டுபோனேன். ஷம்ஸ் தப்ரேஸ் வீட்டினுள் பிரவேசித்ததும் கீமியாகாதூன் மவுலானு ஷம்ஸ் இருவரும் சம்பாஷிக்கும் சப்தம் கேட்டு ஆச்சரியமுற்றேன்."

"கீமியாகாதூன் கணவனுடன் கோபித்துக்கொண்டு போய் விட்டதாக பொய்வதந்தி, கிளப்பிவிட்டதன் பேரில் அல்லவோ வீணுக நான் சில ஸ்திரிகளை அவரைத் தேடிவர அனுப்பநேர்ந்தது என்று தனக்குள் சொல்லிக்கொண்டேன்."

அப்பால் நான் உள்வில்போவதாக இருந்தால் அவ்விருவர்களின் சம்பாஷணையில் ஏதேனும் இடஞ்சல் நேரிடுமென்றெண்ணி வெளியேவர எத்தனிக்கையில் "மவுலானு உள்ளே வாருங்கள்" என்று ஷம்ஸ் என்னை அழைத்துக்கொண்டார்கள்.

நான் உள்ளேபோய் பார்த்தபோது அங்கே ஷம்ஸைத்தவிர வேருெருவரையும் காணும்.

"கீமியாகாதூன் எங்கே என்று விசாரித்தேன். அவர் கோபித்துக்கொண்டுபோய் விட்டாரே! தங்களிடம் வரவில்லையா?" என்று மவுலானு என்னைக் கேட்க, நான் "இதோ! சற்றுமுன் அவர் தங்களிடம் பேசிக்கொண்டிருந்தாரே" என்று கேட்டேன்.

ஆண்டவன் என்னிடத்தில் மிகுந்த பிரீதி வைக்கிருன். நான் எந்த வடிவத்தை என் மனக்கண்ணில் அமைத்துக்கொள்ளுகிறேனே அவன் அதில் எனக்கு பிரகாசமளிக்கிருன்.

அவன் ஒரு எல்லைக்குட்பட்டு தன்பிரீதியை அடக்கிக்கொள்ள வில்லை. இறைவனே! மூஸா நபிக்கு நீ தூர்மலையின் மீது உன் தரிசனத்தை அருள் புரிந்திருந்தாய். எனக்கோ இங்கு ஒவ்வொரு காட்சியிலும் உன் ஒளியை வீசுகிருய் (ஒருகவிஞர்)

அச்சமயம் நான் கீமியா காதூன் தோற்றத்தை காண்பிக்குமாறு இறைவனுடன் விண்ணப்பித்துக்கொண்டேன். அவன் அதற்கேப்ப எனக்கு காட்டியுள்ளான்.

மற்றொரு ரிவாயத்தில் வந்திருக்கிறது:— ஒரு நாள் கிமியா காதூன் ஹஸ்ரத் ஷம்ஸ்உடைய அனுமதியின்றி வெளியிற் சென்றிருந்தார். அதன்நிமித்தம் அவர் திரும்பிவந்தபோது ஹஸ்ரத் ஷம்ஸ் அவரை கோபப்பார்வையைக் கொண்டு உற்று நோக்கவே அவர் நோயுற்று 3–வது தினமே காலஞ் சென்று விட்டார்.

இந்த சம்பவம் ஹிஜ்ரி 644 ல் நிகழ்ந்த தென்றும் மவுலானா ஷம்ஸ் தம்மனைவியின் 40-ம் நாள் கிரியைக்குப்பின் ஷாஅபான் மாதத்தில் திமஷ்க் நகரை நோக்கி சென்று விட்டார்க ளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (முனாகிபுல் ஆரிபீன்.)

## மவுலானா ஷம்ஸ் அவர்களின் குணாதிசயங்கள்

அல்லா உடைய பரிசுத்த அடியார்கள் வயிரார சாப்பிடுவதில்லை என்பதன் பொருள் அவர்கள் தம் இச்சையை தமக்குட் படுத்தி வைக்க வேண்டும் என்று நினைத்து வந்தார்கள் என்பதேயாகும். வயிறு நிறைய புசித்து விட்டால் அல்லா உடைய இபாதத்தில் குறைவு ஏற்படும். உணவு உண்ணாமல் வாழ் நாட்களை கழிக்கவும் முடியாது.

ஆனது பற்றியே ஒலிமார்களும் சாலிஹீன்களும் கொஞ்சம் சாப்பிட வேண்டுமென உபதேசித்து உள்ளார்கள். அதிலிருந்து நப்சுக்கும், ஓர் எச்சரிக்கைக்குரிய பாடம் அடையப் பெறுகிறது. தப்பித்தவறி யாதொரு துன்பத்தில் சிக்குண்டு போய் சாப்பாடு கிடைக்காமற் போய் விட்ட போதிலும் அல்லது வறுமையேற்பட்ட போதிலும் பொறுமை தவக்கல் என்ற விசுவாசக் கொள்கையை அவன் மூலம் கடைபிடிக்க சாத்தியமாகி விடும்.

மவுலானா ஷம்ஸ் அவர்கள் கடைத்தெருவி லிருந்து ஒரேயொரு ரொட்டியைக் கொண்டு வந்து அதை ஜலத்தில் நனைத்துப் புசித்து வருவார்கள். அவர்களுக்கு ரொட்டி விற்பனை செய்து வந்த கடைக்காரர் அதை அறிந்து ரொட்டி ஒன்றை முன்னமேயே நெய் தோய்த்து வைத்திருந்து ஹஸ்ரத் அவர்களுக்குக் கொடுத்தார். ஆனால், ஹஸ்ரத் அவர்கள் அந்த நாளிலிருந்து அக்கடைக்காரரிடம் ரொட்டி வாங்குவதை நிறுத்தி விட்டார்கள்.

யௌவனப் பருவத்தில் அவர்கள் தங்கள் நப்ஸை கொடுமையாக நடத்தி வந்தார்கள். இடையில் பல நாட்கள் வரை சாப்பிடாமலேயே இருந்தும் வருவார்கள்.

இக்காலத்தில் அனுதினமும் மும்மூன்று தடவைகளில் புஷ்டியானதும், ருசிகரமுமான ஆகாரங்களை புசித்து வருபவர்கள் பண்டைகாலத்திய சூபியாக்களையும், நாதாக்களையும் பற்றி சற்று நேரம் சிந்தித்துப் பார்த்தல் அவசியமாகும்.

அவர்கள் ஒரு தோண்டி சுத்த ஜலம், வார்க்கோதுமை ரொட்டி இவ்விரண்டைக் கொண்டும் திருப்தியடைந்து 40 நாள் உபவாசத்தை மேற்கொண்டுவந்தார்கள்.

சில மஹான்கள் அத்தகைய உணவும் இல்லாமலேயே பலநாள் இபாதத்தில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள்.

மவுலானா ஷம்ஸ் அவர்கள் வாலிபத்தில் ஒருவாரத்தில் 2, 3 தடவையுங்கூட ஆகாரமில்லாமல் இருந்து வந்திருக்கிறார்கள். 10, 15 நாட்களுக்குப் பின்னால் அவர்களுக்கு சாப்பிடும்படியாக நேர்ந்துள்ளது.

அவர்கள் மேற்சொல்லிய பிரகாரம் சுற்றுப் பிரயாணத்தில் ஆவல் கொண்டிருந்தமையால் சில வேளைகளில் ஜனசஞ்சாரமற்ற ஸ்தலங்களையும் அடைந்து வந்தார்கள். அவ்வமயம் அவர்கள் தங்கள் உபவாசத்தின் ஆதரவில் அக்கஷ்டத்தை சகிக்கக்கூடியவர்களாக இருந்தார்கள். அவர்கள் ஓர் இடத்தில் அதிக நேரம் தங்கி இருக்கமாட்டார்கள். சதா அலைந்து கொண்டிருப்பதிலேயே அவர்களுக்கு அதிகப் பிரியம்.

ஒரு சீமான் உடைய பையன் மிக்க மந்தப்புத்தி யுள்ளவனாகயிருந்தான். அவனுக்குக் கல்வி புகட்ட ஆசிரியர்களால் முடியவில்லை. இறுதியாக அவனை மவுலானா சமுகத்தில் கொண்டு வந்து விடப்பட்டது.

மவுலானா அவர்கள் தினசரி ஒரு ஜுஸ்வு வீதம், ஒரு மாதத்திற்குள் குர்ஆன் சரீபை அவனுக்கு மனப்பாடமாக்கி வைத்தார்கள். அதைப் பற்றி ஜனக்களுக்கிடை பிரஸ்தாப மேற்படவே மவுலானா அவர்கள் அந்த இடத்தை விட்டும் வேறிடத்திற்குச் சென்று விட்டார்கள்.

ஆனால் அங்கு அவர்களால் அதிசயிக்கத்தக்கவாறு ஏதேனும் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்து கொண்டே இருந்து வந்தது. மவுலானா அவர்களுக்கு ஒருவர் மீது கோபம் வந்தால், "இறைவனே! நீ அவருக்கு நீண்ட ஆயுளும் திரண்ட செல்வமும் தந்தருள்வாய்!" என்று பிரார்த்திப்பார்கள்.

ஆனால் இம்மொழிகளில் எவ்விதமான இரகசிய அர்த்த புஷ்டி உண்டென்பதை நிதானித்துப் பார்ப்பது அவசியமாகும்.

நீண்ட ஆயுள் மனிதனுடைய மறுமைக்கு தீங்கையும், சில வேளை இம்மைக்கு கேட்டையும் விளைவிக்க ஏதுகரமாய் விடுகிறது. செல்வ அபிவிருத்தி அல்லாஹ் உடைய தியானத்தில் நின்றும் மனிதனை அசட்டை செய்யச் செய்து அவனில் பிர்அவ்ன் உடைய செருக்கை உண்டுபண்ணி விடுகிறது.

நீடித்த ஆயுள் உலக சஞ்சலங்களுக்குக் காரணமாய் விடுகிறது. கால சுழற்சிகள், படிப்பினைகள், துக்க சம்பவங்கள், உடல் பொருள் கஷ்டங்கள் இவையாவும் மனிதனுடைய வாழ்க்கையில் தொடர்ந்த வண்ணமாயிருக்கக் கூடியவை: எனவே மௌலானா அவர்கள் ஆசிர்வதத்தில் இத்துணை ரகசிய நுட்பங்கள் பதுங்கிக் கிடக்கின்றன.

நம்மை அசந்தோஷமாக வைப்பவர்களை இறைவனே! நீ சந்தோஷப்படுத்தி வைப்பாய். நம் மனதை புண்படுத்துபவர்கள் இல்லத்தை நீ செழிப்பாக்குவாய்!" (ஓர் கவிஞர்)



மவுலானா ரூம் அவர்களின் புதல்வர் ஸுல்தான் வலா ரிவாயத் செய்கிறார்கள்: ஒரு நாள் எனது அருமை தந்தையார் அவர்கள் மவுலானா ஷம்ஸ் உடைய உயர்தரப் பதவிகளைப் பற்றியும், அவரது சிறப்புற்ற அந்தஸ்தைக் குறித்தும் சொற்பொழிவு ஆற்றினார்கள். அதைக்கேட்ட நான் மவுலானா ஷம்ஸ்உடைய சமூகத்தில் ஆஜராகி எதிர்ப்பாராத அளவிற்கு அவரை கண்ணியப் படுத்தினேன்.

"இன்று நீர் என்னை எதிர்ப்பாராத அளவிற்கு கண்ணியப் படுத்தவேண்டியக் காரணம் யாது?" எனக்கேட்டபோது, நான் என் தந்தையாரின் மொழிகளை எடுத்துரைத்தேன் உடனே அவர்கள், "நான் உம்முடைய அருமைப் பிதாவின் மாட்சிமைக் கடலின் ஒரு துளிக்குச் சமமானவனல்ல. அவரது பிரகாச சூரிய

ஒளியின் ஒரு அணுவைப்போலாகவும் என்னைக் கருதவேண்டாம். என்னைப்போலொத்த ஆயிரக்கணக்கான ஷம்ஸுத்தீன்களை அவர்கள் தமக்குக் கீழ் அடக்கிக்கொண்டிருக்கிறார்கள்'' என்று மொழிந்தார்கள். சுருங்கச் சொல்லில் அவரது சுபாவத்தில் விசேஷ தாழ்மை ஏற்பட்டிருந்தது. விரோதியின் விரோதத்தையும், அவனது விசுவாசமற்ற செய்கைகளையும் மறந்து அவனை மன்னித்து விடுவார்கள்.

அதைப்பற்றி ஒரு தடவை அவர்கள் "ஒருவன் அல்லாவுக்காகவே நம்முடன் விசுவாசமாய் நடந்து கொண்டிருப்பானாகில் அப்புறம் அவன் நம்மீது எண்ணிறந்த கொடுமைகளை விளைவித்த போதிலும் நாம் அதைப்பற்றி நினைக்க மாட்டோம். ஏனெனில் விசுவாசத்தை நேசிப்பவன் கொடுமையை வெறுப்பான்'' என்று சொன்னார்கள்.

மவுலானா ஷம்ஸ் தர்க்க சாஸ்திரம், வான சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், பூமிசாஸ்திரம் ஆகிய கல்வி வித்தை களிலும் தேர்ச்சி பெற்றிருந்த தாகவும் ஆனால் இரகசிய விஷயங்களின் அந்தரங்க அருள் அவர்களுக்கு வாயப் பெற்ற பின்னர் அந்த பகிரங்க கல்விகளை விட்டொழித்து தௌஹீத், மாரிபத் உடைய அரிய ஞானத்தில் ஈடுபட்டு விட்டதாகவும் ரிவாயத்து வந்திருக்கிறது.

## மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ் படுகொலை

மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ் மவுலானாரும் இவ்விருவர்களுக்கிடை அன்பு, விசுவாசம் அன்னியோன்னியம் ஆகிய அம்சங்களில் மேன்மேலும் அதிக சம்மந்தம் ஏற்படவே பகைவர்களின் பகையும் அவ்வளவிற்கே விருத்தி யடைந்துச் சென்றது.

மவுலானாஷம்ஸ் அந்நிலைமையை சகிக்க முடியாமல் பலதடவை கூனியாவுக்கு சென்று விட்ட போதிலும் மவுலானாரும் அவர்களை பின் தொடர்ந்து சென்று எவ்விதத்திலேனும் அவரை தம்முடன் அழைத்து வந்து விடுவார்கள். இருவர்களுக்குள்ள திறமையும் இரகசிய ஆராய்ச்சியும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரியாதவாறு அவ்வளவுநேசபான்மையை இணைத்துள்ளன.

இதைக் கண்ட சத்துருக்கள் மனம் படாதபாடு பட்டது. மவுலானா ஷம்ஸ் மவுலானா ரூமிடத்திற்கு வராவண்ணம் அவர்களை

வேலை முடித்து விட வேண்டும் என்றும் சதியாலோசனை செய்யத் தொடங்கினார்கள்.

ஓர் இரவு இரண்டு மவுலானாக்களும் தனிப்பட்டு வீற்றிருந்த சமயம் கொலையாளர்கள் அதுவே தக்க சமயமென எண்ணினார்கள். "முனாகிபுல் ஆரிபீன்" ல் அதைக் குறித்து பின்வருமாறு எழுதப் பட்டிருக்கிறது.

கொலையாளர்களுள் ஏழுபேர்கள் ஒருவர் மற்றொருவரின் கையைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள். அவர்களில் மவுலானாரும் உடைய பெரிய புதல்வன் அலாவுத்தீன் முஹம்மத் பெயர் கொண்டவனும் ஒருவனாவான். அவர்களில் ஒருவன், அறைக்குள் நுழைந்து மவுலானா ஷம்ஸை சற்று வெளியில் வருமாறு சமிக்கினை காட்டினான்.

அவ்வமயம் மவுலானா ஷம்ஸ் மவுலானா ரூமை நோக்கி "இதோ இன்று வாக்கு நிறைவேறுகிறது. இத்தலை தங்கள் திருப்பாதங் களின் மேல் பலியாகப் போகிறது" என்று ஆறுதலுடன் கூறி யுள்ளார்கள்.

நப்ஹாதுல் உன்ஸ், முனாகிபுல் ஆரிபீன் இந்த இரண்டு கிதாபு களிலும், "மவுலானாரும், மவுலானாஷம்ஸ் உடைய அம்மொழி களை செவியுற்றதும் சிருஷ்டிகர்த்தாவின் அழைப்பு போய் வாருங் கள். அவனுடைய சட்டளை மகத்தானது அதை நிராகரிக்க முடி யாது" என்று சொன்னதாக வரையப் பட்டிருக்கிறது மவுலானா ஷம்ஸ் அறையை விட்டு வெளி வந்ததும் கொலையாளர்கள் கையில் வாட்கள் பிடித்தவர்களாக ஒரு மிக்க திரண்டுவந்து அவர்களைத் தாக்கினார்கள்.

அச்சமயம் மவுலானா ஷம்ஸ் ஓர் கர்ஜனை யிட்டார். அதைக் கேட்ட கொலையாளிகள் மனம் திடுக்கிட்டு கீழே பிரக்ஞையற்று சாய்ந்தார்கள். அப்பாதகர்கள் தங்கள் வாளின் பிரயோகத்தால் சில இரத்தத்துளிகளே அங்கு பூமியில் இருக்கக்கண்டார்கள்.

முனாகிபுல் ஆரிபீனில் மவுலானா ஷம்ஸ் உடைய படுகொலை சம்பவம் ஹிஜ்ரி 645-வது ஆண்டில் வியாழக்கிழமை யன்று நிகழ்ந்த தாக கண்டிருக்கிறது. மவுலானா ஷம்ஸ் கர்ஜித்தவுடன் அவர் மாயமாய் மறைந்து விட்டாரென்று சிலர் விவரிக்கிறார்கள்.

வேறு சிலர் மவுலானருரும் உடைய தந்தை யாகிய பஹாவுத்தீன் அவர்களின் சமாதிக்கருகில் அவர் கல்லடக்கம் செய்யப்பட்டாரென்றும் கூறுகிருர்கள். மவுலான ஷம்ஸ் உடைய கொலைப் பாதகர்கள் மவுலானவை கொலை செய்தபின் தாங்களாகவே அவரை ஓரிடத்தில் அடக்கம் செய்து விட்டதாகவும். மவுலான ஷம்ஸ் மவுலானருரும் உடைய பேரப்பிள்ளையாகிய ஹஸ்ரத் ஆரிப் சல்பி அவர்கள் ரிவாயத்துப்படி ஹஸ்ரத் சுல்தான் வலா உடைய சொப்பணத்தில் வந்து நான் இன்ன விடத்தில் தூங்கிக் கொண்டிருக்கிறேன் என்று சொன்னதன் பேரில் அவர் சில தோழர்களுடன் இராக்காலத்திலேயே அங்கு சென்று சமாதியிலிருந்து மையத்தை எடுத்து அத்தர் முதலிய வாசனைத் திரவியங்களைப் பூசி மத்ரஸாவின் ஸ்தாபகரான அமீர்பத்ருத்தீன் சமாதிக்கருகில் அவரை கல்லடக்கம் செய்து விட்டதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

மவுலானருருமுக்கு மவுலானஷம்ஸ்உடைய படுகொலையைப்பற்றி தகவல் கிடைத்தபோது "நீண்டகாலமாக மவுலான ஷம்ஸ் தம் சிரசை என் மீது அர்ப்பணஞ் செய்து விட்டதாக சொல்லிவந்தார். அவர் அதை நிரூபித்து விட்டார். ஆண்டவனுடைய செயல்களில் ஒருவருக்கும் தலையிட முடியாது" என்று சொன்னர்கள். ஆயினும் மவுலானஷம்ஸ் உடைய துக்கத்திலும் பிரிவாற்ருமைக்கும் மவுலானருரும் சதா வருந்தி வந்தார்கள்.

## கொலை யாளர்கள் முடிவு

மவுலான உடைய கொலை பாதகர்களுடைய முடிவு சில நாட்களுக்குள்ளாகவே விபரீதமாயிற்று.

சிலர் வறுமையின் காரணமாய் பல நாட்கள் பசிப்பிணியால் வருந்தி இருந்தனர். சிலர் தங்கள் வீட்டுக் கூரைகளி லிருந்து கிழே விழுந்து மாண்டனர். சிலருடைய முகத் தோற்றம் மாறியது. மவுலான உடைய சிரேஷ்டகுமாரர் அல்லாவுத்தீன் முஹம்மத் என்பவரும் கெட்ட செயற்கையின் பயனுக தன்னை பாழ்படுத்திக் கொண்டார். அவருடைய முடிவு நூஹ் (அலை) அவர்களின் புதல்வரைப் போலாயிற்று.

அலாவுத்தீன் தம்தகாத செயலுக்குப் பின் க்ஷயரோகத்தால், பிடிக்கப்பட்டு சில தினங்களுக்குள் காலமாய் விட்டார். அவர்

இறந்த பொழுது மவுலானா ரூம் வீட்டை விட்டு வெளியிற் சென்று விட்டார். அவர் அடக்கம் செய்யப்பட்ட பின்னரே வீட்டுக்குத் வந்தார். மையத் சம்மந்தமான எக்காரியத்திலேனும் அவர் கலந்து திரும்பி கொள்ளவில்லை.

அலாவுத்தீன் தம் தகாத செயலைக் குறித்து சதா வெட்கமும் வருத்தமும் அடைந்து வந்ததாயும் கியாமத் நாளில் தாம் மவுலானா ஷம்சுக்கு முன் எப்படி போவதென்பதைப் பற்றி கவலை அடைந்து வந்ததாயும் சொல்லப்பட்டிருக்கிறது.

## மவுலானா ரூம் அவர்கள் துயரப்படல்.

மவுலானா ஷம்ஸ் வபாத் அடைந்த 40-ம் நாள் கழிந்தவுடன் மவுலானா ரூம் தம் துக்கத்தின் அறிகுறியாக வெள்ளைத் தலைப்பாகை உபயோகிப்பதை விட்டு விட்டு அதன் உபயோகத்தில் வேறுவித மாறுதலை செய்து கொண்டார்கள்.

வபாத் ஆகும் வரையில் ஒரே விதமான உடைதான் அவருக்கு கிலைபட்டிருந்தது.

இரண்டு மவுலானாக்களும், இரண்டு ஜடலங்களில் ஒரே ஆத்தும சஞ்சாரம் என்று சொல்லும் படியான அளவில் அவ்வளவு அந்நியோன்னியமாக இருந்து வந்தார்கள்.

எனவே மவுலானா ரூம் மத்ரஸா உடைய முற்றத்தில் உலாவிக் கொண்டே பல்வேறு துக்க கரமான பார்சீக கவிகளைக் கட்டி அவைகளை பாடி வருவார்கள்.

"உன்னுடைய விருப்பம் என்னுடைய விருப்பம்-நீ எதைக் காண்பிக்கிறாயோ நான் அதைத்தான் பார்க்கிறேன்."

'நீ எந்த நிலையில் வைக்கிறாயோ அது எனக்கு சம்மதம். உன்னுடைய தரிசனம் ஈமானுடைய ஒளியாகும்.'

"உன்னுடைய பிரிவு, குப்ரு உடைய அந்தகாரத்தைப் போலாகும் இப்பேர்ப்பட்ட மோகமுள்ள கண்பனை தனிமையிலும் துக்கத்திலும் விட்டு போவது எந்த தேசத்தின் பழக்க வழக்கமாகும்."

## மவுலானு ஷம்சின் உபதேசங்கள்

### அழகானதோர் மஹானை சந்தித்தல்

மவுலானு ஷம்சுத்தீன் ஒரு தடவை அழகிலும் குணசீலத்திலும் சிறந்ததோர் மஹானை சந்தித்த போது "நீர் எந்த விளையாட்டில் மயங்கிப் போய் காகோடி நிலைமையை அடைந்திருக்கிறீர்.?" எனக் கேட்டதற்கு அவர் "லக்ஷணமுடையவர்கள் ஆண்டவனது தோற்றத்திற் குரியவர்கள்; நான் அத்தோற்றக் கண்ணுடியில் ஆண்டவனுடைய ஒளியை உற்று நோக்குகிறேன்." என்று பதிலளித்தார்.

மதியீனரே! ஆண்டவனுடைய ஒளியை மண், தண்ணீர், கண்ணுடியிலா பார்க்கிருய்? அதுவும் பிறரிட மிருந்து வாங்கித்தானே உன்னுடைய மனதின் கண்ணுடியில் பார். அப்பால் அவனைத் தேடு.

### பங்கா குடித்தல் ஹராம்

ஒரு தடவை ஒருவர் மவுலானுவிடம் பங்கா குடிப்பதைப் பற்றி வினவினுர்.

தாங்கள் அதை ஹராம் என்று சொன்ஞர்கள்.

திருக்குர்ஆனும் அதை பலமாய்க் கண்டிக்கிறது.

நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலும் அதை மூஸ்லீம்கள் உபயோகிக்கவில்லை. யாராவது வேண்டு மென்றே குடித்திருந்தால் அவருக்கு மரண தண்டனை விதித்திருக்கலாம்.

மவுலானு ரூமுடைய புதல்வர் ஹஸ்ரத் சுல்தானுல் வலா அவர்கள் மவுலானு ஷம்சுத்தீன் இடத்தில் பையத்துச் செய்ய வந்தபோது அவர் பங்காவைப் பற்றி குறிப்பாய்க் கேட்ட பொழுது அது கூடா தென்றும், அதை விட்டும் விலகி யிருக்க வேண்டு மென்றும் உபதேசித்தார்கள்.

### தௌஹீத் விளக்கம்

ஒருவர் தௌஹீத் விளக்கத்தைப் பற்றி மவுலானுவிடம் கேட்டார். பரிசோதனைக்காக வேண்டி வினவுவது பித்அத்தாகும். இப்பொழுது நீர் கேட்பதன் பொருட்டு பதில் கூறுவது அவசியமாகிறது.

உண்மையில் யாதொன்று இருந்து வருகின்றதோ அதெல்லாம் ஆண்டவனுடைய சொத்தாகும். யாதொன்று இருந்து வருகிறதோ அது ஆண்டவன் சார்பாகவேயாகும். யாதொன்று இருந்து வருகின்றதோ அது ஆண்டவனையே நோக்கி திருப்பச் செல்லும் என்று பதிலளித்தார்கள்.

## கனவின் பலன்

மவுலானு ரூம் மொழிகிறார்கள்: நான் ஒரு நாள் கனவில் பார்த்ததாவது:—என் தந்தையின் கிதா பொன்றை படித்து அதன் விஷயத்தை சபையோருக்கு செவியுறச் செய்து கொண்டிருக்கிறேன்.

துயில் நீத்த போது மவுலானு ஷம்சுத்தீனை எதிரில் கண்டேன். நீங்கள் புத்தகங்கள் படிப்பதை இன்னமும் நிறுத்தவில்லையா? என்று கேட்டார்கள். நானே சிறிதுகாலமாக அதை நிறுத்தி விட்டேனென்று சொன்னேன். சென்ற இரவு சபையோருக்குமுன் வாசித்துக் கொண்டிருந்தீரே அதென்ன என்று கேட்டார்.

நான் அது கனவு சங்கதி அல்லவோ என்றேன். அதற்கு அவர்கள் எந்த விஷயங்களில் அதிக கவனம் இருந்து வருமோ அவையே கனவில் தென்படும். புத்தக ஆராய்ச்சியின் ஞாபகம் இல்லாதிருந்தால் கனவில் வரக்காரணமில்லையென மொழிந்தார்கள்.

## ஆரிப் அரிகுறிகளும் மஅரிபத் விளக்கமும்

ஆரிபுடைய அரிகுறிகள் மூன்று வகையில் வகுக்கப்படும். மனம் கவலையில், உடல் பெண்ணுசையில், கண் ஆண்டவன் சாக்ஷியில் ஆரிப் உலக சம்மந்தத்திலிருந்து லக்ஷிய மற்றவன். மருமையின் பயத்தை இழந்தவன் ஆண்டவன் உள்ளமையில் தன் செயர்க்கையை கலந்து கொண்டவன்.

மாரிபத் எதற்குப் பெயரென ஒருவர் கேட்டபோது:- ஜீவித்தலை மர்ணித்தலாகவும், புலப்படாததை புலப்படுவதாகவும், இல்லாததை இருப்பதாகவும் சொல்வதே யாகும் என்று சுருக்கமாய்ச் சொன்னர்கள். அதன் வியாக்யானம் யாதெனில், சரீரமும் அதன் கஷ்டங்களும் ஜீவித்திருக்கின்றன. அவைகளை ஜீவித்திருக்கவிடாது மர்ணிக்கச் செய்யும் துறையில் அழித்துவிட வேண்டும்.

மனம் இறந்து கிடக்கிறது ஆனால் அது பகிரங்கத்தில் புலப்படவில்லை. அதற்கு புத்துயிர் அளிக்கவேண்டும். இது இரண்டாவதாகும். கடைசிநாள் இப்பொழுது இல்லாமலிருந்த போதிலும் நம்முன் அது இருப்பதாகவே நினைத்து பேராசை, பாவங்களை விட்டும் பயபக்தியுடன் விலகிஇருத்தல் வேண்டும். இது மூன்றாவதாகும்.

## அன்பு, ஆத்திரம், அழகு, மகத்துவம்

மவுலானா உடைய சுபாவத்தில் அளவிறந்த சுறுசுறுப்பு இருந்து வந்தது. அல்லாவுடைய பிரகாசஒளி அவர்களில் நிலை கொள்ளும் சமயங்களில் அவரது முகத்தோற்றமும், கண்களும், சிவந்துபோய் கண்களினின்றும், இரத்தம் வெளிவருவது போலாயிருக்கும். "என்னில் ஆத்திரம், கடாக்ஷம் இரண்டும் ஒருங்கே அமைந்துள்ளன" என்று மவுலானாவே கூறியுள்ளார்.

மவுலானாரும் சிறப்பும் சௌந்தர்யமும் வாயப்பெற்றவர்கள். என்னிலோ அந்த அம்சங்களுடன் ஜலால் என்னும் கம்பீர மகத்துவமும் உண்டு. மவுலானாரும் என்னை மனமாற நேசிக்கிறார். அவர் என்னுடைய ஜலால் சம்மந்த பட்ட கெடுதல்களை சற்றும் பொருட்படுத்தவில்லை. அவருக்கு என் கெடுதிகளும் தெரிந்து விடட்டும் என்பதற்காக நான் கெடுதிகளையும், மேற் கொண்டிருக்கிறேன்.

## மானிடப்பதவி உயரியதா? அல்லது வானம் உயரியதா?

"ஒருவரைப்பற்றி சிலாகித்துப் பேசுங்கால் அவரது பதவி வானம் வரையில் எட்டும்" என்று சிலர் கூறுகிறார்கள். அதைப் பற்றி மவுலானா ஷம்ஸ் சமுகத்தில் வினவப்பட்டது. அப்போது அவர்கள் வல்ல இறைவன் பூமியிலிருந்து வானம் வரையிலுமுள்ள தனது சகல சிருஷ்டிகளுக்கிடை மானிட வர்க்கத்திற்கே மேன்மையைத் தந்தருளியுள்ளான்.

மனிதன் எல்லாவற்றிலும், மேன்மை வாய்ந்தவன். தாழ்மை, மூர்க்கம் இரண்டும் அவனிடத்தில் அமைந்துள்ளன

## மூனபிக்குக்கு விமோசனம் கிடையாது

ஒருதடவை மவுலானா அவர்கள் "திறந்த சபையில் மூமின் காபிர் இல்லாததால் அவன் நன்றி பாராட்டுதலுக்குரிய நெற்றிப்

பணிவிடை செய்ய வேண்டும். காபிர், முனபிக் இல்லாததால் அவன் அதற்காக நன்றி பாராட்ட வேண்டும். முனபிக் ஆனவர்கள் உலக சிருஷ்டிகளுக்கிடை யாவற்றிலும் கேடு கெட்டவர்களாவார்.

திருக்குர்ஆனிலும், ஹதீதிலும் அதுபற்றி கூறப்பட்டுள்ளது. நரகத்தை விட்டும் பாவாளிகள் தத்தம் நேரத்திற் கேற்ப விடுதலை யடைந்து போவாராயினும், மீண்டும் அங்கு சிலர் மீதியாகவே இருக்கத் தென்படுவர். "நீங்கள் யார்?" என்று அவர்களிடம் வினவப் படும் பொழுது அவர்கள் "நாங்கள் முனபிகீன்கள். எங்கள் உள்ளத்தில் ஒன்றும் பகிரங்கத்தில் மற்றென்றுமாக இருந்து வந்தது. தம்மவர் அன்னியரெல்லோரும், நம்மைக்கண்டு வெறுப்படைந்து வந்தார்கள். இன்று எங்களுடைய விடுதலை இயலாததாக இருந்து வருகிறது" என்று கூறினர்கள்.

இந்த ஹதீது பிரஸ்தாப மடையா திருப்பினும், அத்தரங்க உள்ளம் படைத்தவர்கள் இதிலிருந்தும் பிரயோசனம் அடையக் கூடும்.

## 70 ஹஜ்ஜுக்குரிய நன்மைகள்

ஒருதடவை பின்வருமாறு விவரிக்கிறுர்கள் :—

ஹஸ்ரத் பாஎஸீத் புஸ்தாமி அவர்கள், கால்நடையாகவே எழுபது தடவை ஹஜ்ஜு செய்துள்ளார்கள். 71—வது தடவை ஹஜ்ஜுக்கு செல்லும் பொழுது அவர்கள் தம்வழியில் ஓர் அதிசயக் காக்ஷியை கண்ணுற்றுர்கள். அதாவது தண்ணீர் தட்டு ஏற்பட்டுள்ள அந்த விடங்களில் ஏதோ ஒரு கிணறு தென்பட்டது. கொடிய தாகத்தின் பொருட்டு அக் கிணற்றின்மீது அநேக ஹாஜிகள் கூடி யிருந்தார்கள்.

கிணற்றிலிருந்து தண்ணீரெடுத்துப் பருகுவதற்காக ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டும் முந்திக்கொண்டும் இருந்தனர். இக் கூட்டத்திற்கருகில் நாய் ஒன்றும் கொடிய தாகத்தின் பொருட்டு தன் நாக்கை நீட்டிக்கொண்டும் பெருமூச்சு சொரிந்து கொண்டு நின்றது. அதன் பரிதாபத் தோற்றமே அதன் தாகத்தின் கொடுமையை வெளிப்படுத்தி வந்தது ஆனல், அதை கவனிக்க அங்கு யாருக்கும் என்ன அக்கரை வந்தது? அந்த எளிய வாயில்லாப் பிராணியை யார் கேட்பது?

நாய் ஹஸ்ரத் அவர்களை கண்டதும், தன் வாலை ஆட்டிக் கொண்டு அவரிடம் ஓடிற்று. தன் தாகத்தின் அறிகுறியாக அது சிறுசிறு ஊளையிடவும் ஆரம்பித்தது. அப்பொழுது நான், என்னுடைய 5 ஹஜ்ஜுகளின் நன்மையைப் பெற்று, அதற்கு ஈடாக யாராவது புண்ணியவான் இந்த நாய்க்கு கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள் என்றேன். என் சப்தத்தை ஒருவரும் செவியுற்று அதன்படி செய்ய வில்லை.

நான் 5 முதல் 70 ஹஜ்ஜு வரையிலும் அதிகரித்துக் கொண்டு போனேன். அப்போதும் ஒருவர்கூட கவனிக்க வில்லை. பிறகு நானே என் கைப்படத் தண்ணீர் எடுத்து அந்த நாய்க்கு முன்னால் வைத்தேன். நாய் அதைக் குடிக்க ஆரம்பித்ததும், நான் என் மனதில் "அந்தோ! நான் கால் நடையாக எவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களுக்குட் பட்டு 70 ஹஜ்ஜு செய்திருந்தேனே, இந்த அற்ப நாய் இரண்டு முடக்கு ஜலத்திற்காகல்லவோ நான் அதன் நன்மையை அதன் கிரயத்திற்காக அர்ப்பணஞ் செய்து விட்டேன்" என்று எண்ணங் கொள்வதற்குள், நாயானது தண்ணீரிலிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டது. இதற்குள் "என்ன உமக்கு நாய்க்கும் பொருத்தமற்ற 70 ஹஜ்ஜுகளை நிறைவேற்றி விட்டேன் என்று செருக்குண்டா?" என்று இல்ஹாம் வந்தது.

நான் அதைக் கேட்டதும் உடனே இறைவன் சந்நிதானத்தில் தவ்பாச் செய்து மன்னிப்புத் தேடினேன். பின்னர், நாயும் மீதி மிச்சமான தண்ணீரைக் குடித்துக்கொண்டது.

## மனச்சுத்தியின் அவசியம்

மவுலானா ஷம்ஸ் கூறுகிறார்கள் :— மனச்சுத்தி யில்லாத தொழுகை வெளிப்படையான தொழுகையாகும். "லாஇலாஹ இல்லல்லாஹ்" என்பதுஓர் உறுதியான கோட்டையாகும். அதற்கு எத்தகைய வேதனைக்குரிய அச்சமுமில்லை. ஆனால், இக்கலிமாவை நாவினால் மட்டும் கூறிவிடுவதால் பலனேற்படாது. மேலும் மனச் சுத்திவுடனேயே நாவினால் கூறவேண்டும்.

அவ்வாறு கூறிவருவதன் பலனாக, ஒருவர் வானம், பூமி காக்ஷிகளையாவும் உலாவிப் பார்க்கும்படியான தெய்வீக அருள் வாய்த்து விடும்.

## முர்ஷித் அவசியம் எதற்காக?

மவுலானா ஷம்ஸ் அவர்களிடம் ஒருவர் பின்வருமாறு விவரித்தார்:— ஒரு நாள் ஷைக் ஹரீரி அவர்களிடம் ஒருவர் வந்து, "உங்கள் முரீது மார்க்கத்திற்கு மாறாக நடந்து கொள்கிறாரே, அதேன்? முதலாவது அவர் தொழுது கொள்வதுமில்லை, நீங்கள் அதைப்பற்றி அவரை ஏன் கேட்கக் கூடாது?" என்று குறை கூறினார்.

"அல்லாஹ் ரஸூலுக்கு அவர் வழிபட்டு நடக்காமல் போனால் நான் அதற்கு என்ன செய்ய முடியும்?" (மீண்டும் சிரித்து சொன்னார்கள்) அவர் நோன்பு வைத்து தொழுது கொள்வாராகில், மார்க்கக் கட்டளைகளை யனுசரித்ததன் காரணமாக அவருக்கோ 'நஜாத்' ஏற்பட்டு விடும். பின்னர் அவருக்கு, நான் வேண்டும் என்ற அவசியம்தான் என்ன? என் முரீதுகள் உலகில் சுகவாழ்க்கை அனுபவிப்பதற்காகல்லவோ என் வஸ்திரக் கரையைப் பற்றியுள்ளார்கள்; இந்த நிலைமையில் நான் அவர்களை ஆதரித்து விடுதலைப் பெறச் செய்ய வேண்டுமென்பது அவர்கள் நோக்கம்.

ஆனால், அவர்கள் தாங்களும் அல்லாஹ்வுடைய கட்டளைப்படி நடந்து கொள்வார்களாயின் அது இன்னமும் எவ்வளவு விசேஷமான காரியம்" என்று விடை பகர்ந்தார்கள்.

## சீமான் உடையில் பகீர் தன்மை.

ஒருநாள் மவுலானா ஷம்ஸ் தம் தோழர்களுடன் ஓரிடத்திற்குச் சென்றுகொண்டிருந்தார்கள். அச்சமயம் அவருக்கெதிரில் பெரிய சீமான் ஒருவர் தென்பட்டார். அவர் குதிரைவாகனத்தில் அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றியும் பெருங்கூட்ட மொன்று திரண்டு வந்தது. சாமான் ஏற்றப்பட்ட சில பிராணிகளுமிருந்தன. அவர்களெல்லோரும் வேறிடம்போய் தங்குவதற்கான கூடாரங்களும் இருந்தன. அந்த வலம் மௌலானாவுக்குச் சமீபித்தபோது சீமான் தம் குதிரை மீதிலிருந்து இறங்கிவந்து, மவுலானாவுக்கு சலாம் செய்து அவருக்கு முன் கண்ணீர் சொரிந்தவண்ணமாய் கைகட்டி நின்றார்.

அவரைக் கண்ணுற்ற மவுலானா அவர்கள், சற்றுநேரம்வரையில் மௌனஞ்சாதித்து நின்றார்கள். அப்பால் அவர் மீண்டும் தம் குதிரை மீதேறிபோய்விட்டார்.

அப்போது மவுலானா ஷம்ஸ் அவர்கள் தம்தோழர்களை நோக்கி "வல்ல இறைவன் லக்ஷிய மற்றவன்; அவன் ரகசிய நுட்பங்களை அறிதல் சாத்தியமல்ல. அவன் பாமரர்களுக்கு பல்வேறு பாக்கியங்களைத் தந்தருள்வது போலவே பிரமுகர்களுக்கும் கஷ்டசங்கடங்களைக்கொடுத்து சோதனைக்குட்படுத்துகிறான்" என்றுகூறியபோது தோழர்கள் அனைவர்களும் "இந்த சீமான் யார்" என்று கேட்டார்கள்.

"இவர் அல்லாஉடைய ஓர் திருஅடியார். ஆனால் இவர் தம்மை சீமான் உடையில் ஆடம்பரவாழ்க்கையின் மூலம் தலைமறைவாக காலங்கழித்து வருகிறார்."

"எனினும் இப்போது இவருக்கு பகீரின் பகிரங்க உடை தரிக்கவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிருக்கிறது. ஏனெனில் இப்போதையநிலைமையில் அவருக்கு ஆண்டவன் வணக்கத்திற்காக குறைந்த சாவகாசமே கிடைத்து வருகிறது. தலைமைவகித்திருப்பதன் காரணமாக அவருடைய நேரத்தின் பெரும்பாகம் தம்மிடம் வரப்பட்டவர்கள் தேவைகளை பூர்த்திசெய்து வைப்பதிலேயே செலவழிந்து விடுகின்றது.

ஆனால் அல்லாவோ, அவர் இதே நிலைமையில்தான் இருக்க வேண்டுமென பிரியப்படுகிறான். ஏனெனில் அவர் பகீர்ஆடைகளைத் தரித்துக் கொண்டால் உலகம் அவரை விட்டும் போய்விடும். இதே ஆடம்பரத்துடன் அவர் காலங்கழித்தால் இகபர நன்மைகளையும் அவர் ஒருங்கே தேடிக்கொள்ளக் கூடும். எண்ணிறந்த மக்கள் அவரிடம் கொண்டுள்ள நம்பிக்கைகளை பூர்த்தியடைந்து அவரை ஆசீர்வதிப்பார்" என்று விவரித்தார்கள்.

## மவுலானா ஷம்ஸ் அவர்களின் பொன்மொழிகள்.

1. உண்மை நண்பன் யாரெனில் தன் நண்பனின் பிழைகுற்றங்களை கண்டு பிடிக்காமலும் அவரால் ஏதேனும் வருந்தத்தக்க விஷயம் நேரிட்டபோது அதைப்பற்றி பொருட்படுத்தாமலும்,

தன் நன்பனுடைய குறைவுபின்னங்களைப்பற்றி கவனிக்காமலும் இருப்பவனேயாவான்.

2. உள்ளன்பும், ஈவு இரக்கமும் கொண்டவன்மீது வல்ல இறைவன் தனது அருகாமைக்குரிய சிறப்பை அருள்புரிய எச் சமயத்திலும் தயாராயிருக்கிறான்.

3. நன்பனுடைய நெற்றித்தோற்றத்தைக் காட்டிலும் அதிக பிரயோசனத்தை கொடுக்கக்கூடிய புத்தக ஆராய்ச்சி வேறொன்றும் கிடையாது. ஆனல் அத்தகைய நண்பனில் சகல நல்லம்சங்களும் அமைந்திருத்தல்வேண்டும்.

பிரதி நண்பரும் 30 அத்தியாயங்களுக் கொப்பாவார். அதன் திரட்சி ஆண்டவனுல் ஏற்பட்டுள்ளது.

4. இறந்த ஒருவருக்கு பேசத்தக்க சக்தி வாயப் பெற்றிருந் தால், அவர், மரணத்தைப்பற்றிய பற்பல அற்புதமான இரகசியங் களை வெளிப்படுத்தியிருப்பார்.

5. உங்கள் சுமையை பிறருடைய பிடரியின் மீதிருந்து எடுத்துக் கொள்ளுங்கள். ஆனல் அவர்கள்மீதுள்ள சுமையை நீங்கள் சுமந்துகொள்ளுங்கள்.

6. நரகவாசத்தைவிட்டும் விடுதலை பெறவேண்டுமானல், அல்லாஉடைய அடியார்களுக்கு பணிவிடைசெய்யுங்கள். சுவர்க்க வாசத்திற்கு நம்பிக்கை வைப்பீர்களாகில் அல்லாஉடைய இபாதத் தில் ஈடுபட்டு விடுங்கள்.

7. இந்தஜடலமானது அல்லாவுக்கும் அடியானுக்குமிடையே ஒரு திரையாகும். செல்வ கர்வமும் கஷ்டங்களும் இதில் அடங்கி யிருக்கின்றன. அவைகளை ஒருமிக்க அதஞ்செய்து அல்லாஉடைய சந்நிதானத்தை அடைந்து கொள்வீர்.

8. அல்லாவின் தியானத்தில் ஈடுபடுவதே உண்மைநாவாகும். அவனுடைய நன்றிபாராட்டிவருவதே உண்மை மனம் என்பதற்கு தகுதியாகும். எந்நிலையிலும் பொறுமையை கடைபிடிப்பதே ஜடலத்திற்கழகாகும்.

9. எந்த உடலில் கல்வியறிவு இல்லாதிருக்குமோ அது ஒரு துளி தண்ணீரில்லாத ஊரைப் போலாகும். அல்லது எஜமானற்ற ஓர் வேலைக்காரனுக் கொப்பாகும்.

10. நான்கு விஷயங்கள் இன்றி யமையாதவை. (a) செல்வந்தனயிருப்பின் அவரில் அடக்கமும் தயாளகுணமும் இருத்தல் வேண்டும். (b) "பகிர்" ஆகவிருந்தால் அவரில் பொறுமையும் நன்றி பாராட்டுந் தன்மையும் காணப்பட வேண்டும். (c) பாவம் செய்தவராயிருந்தால் தன் பாவத்திற்காக சஞ்சலமடைந்து ஆண்டவனிடம் அச்சம் நிறைந்தவராக இருத்தல் வேண்டும். (d) ஆலிம் (அறிவாளர்) ஆகஇருந்தால் அமல் (அனுஷ்டானம்) மேற்கொண்டவராக இருத்தல் வேண்டும்.

11. ஒருவர் உலகத்தில் இருந்து கொண்டு காலங்கழிக்க வேண்டு மானல் வியாபாரம் கைத் தொழில் முதலிய கைகால் பிரயாசையின்றி ஒன்றும் சாத்தியப்படாது.

12. செல்வப் பேராசை படைத்தவன் பெரும் ஆயாசத்துடன் உயிர்துறப்பான். வறுமை யான நிலைமையிலும் அல்லாவுக்கு நன்றி செலுத்துபவன் மிக்க நிம்மதியுடனே உயிர்துறப்பான். அவன் பொறுமையின் பலனையும் அடையப் பெறுவான்.

13. கல்வியறிவு, பொறுமை இவற்றின் பதவியாவற்றிலும் உயரியதாகும்.

14. பிறரிடத்தில் சுபாவத்திற்கு முறண்பட்ட யாதொரு செய்கையை கண்ணுற்ற போதிலும் அன்போடும் அன்னியோன்னியத்துடனும் அவருடன் பழகிக் கொள்ள வேண்டுமேயல்லாது பகை, குரோதத்திற்கு சற்றேனும் இடந்தரலாகாது.

15. கொடை நாலுவகைப்படும்.

(a) பொருள்தானம்—இது சீமான்களுக்கு உரித்தானது.

(b) சத்திய தியாகம்—இது உழைப்பிலும் தவப்பரயுத்தத்திலும் ஈடுபட்டவர்களுக்குமே உரியது.

(c) ஆத்மதியாகம்—இது உயிரைதத்தஞ் செய்யும் காஸி என்னும் போர் வீரர்களுக்கே அடுத் துள்ளது.

(d) இறுதியாக மனத்தியாகம் என்பது—இது மூற்றிலும் ஆரிபீன் களுக்கும் அல்லா உடைய பயபக்தர்களையும் சார்ந்ததாகும்.

16. தீன் (மார்க்கம்) பாதுகாப்பு இரண்டு அம்சங்களைக் கொண்டது. அதாவது:—நற்குணங்கள், தருமங்கள்.

17. உலமாக்களிடத்தில் நல்லுபசாரம்—ஔலியாக்களிடத்தில் பொறுமை—பகீர்களிடத்தில் திருப்தி—சீமான் களிடத்தில் தரும சிந்தை, வணக்க வாளிகளிடத்தில் தனிப்பட்டிருக்கும் தன்மை முக்கியமாகும்.

18. மரணம் வருதல் நிச்சயமானது எனவே அதை விட்டும் மீளலாமென்பதும் சாத்தியமில்லை. அதற்காக அங்குமிங்கும் ஓடு வதோ அல்லது பிரயத்தனப்படுவதோ கூடாத காரியம்.

19 உன்னுடைய ஜீவனும்சத்திலிருந்து தடுத்து விட எவராலும் முடியாது. உனக்கு கிடைக்க வேண்டிய அளவு எவ் விதத்திலும் கிடைத்துக் கொண்டே இருக்கும்.

ஆனால் மற்றவர்களுக்கு அதிக ஜீவனும்சம்கிடைத்தால் அதற்காக நீ பொறுமைப்படாதே. பேராசை ஷைத்தானுடைய கொள்கையாகும்.

20. அறமும் ஒழுக்கமும் எவரிடத்தில் அதிகம் நிலைகொண்டி ருக்கிறதோ. அவர் தம்நோக்கத்தின் நிறைவேற்றத்தி லிருந்து எட்டியே இருக்கக்கூடிய வராவார்.

சிந்தையும் ஆராய்ச்சியும் எவரிடத்தில் அதிகம் நிலைத் திருக் குமோ, அவரிடத்தில் பரம இரகசிய நுட்பங்களும் அடையப் பெற்றிருக்கும்.

21. எவர்கள் தங்களை மூமின் எனச் சொல்லி தம்நப்ஸை பின் பற்றிநடக்கிறார்களோ, அவர்கள் பொய்யர்களாவர். மேலும் அவர்கள் தங்கள் வீரதீரத்துறையில் தங்களை வீரருடனாக சொல்லிக் கொண்டபோதிலும் அவர்கள் பயங்கொள்ளியான காகங் களைவிட கேடுகெட்டவர்களாவர்.

22. துர் இச்சைகளை அடக்கி விடுவீர்களாகில் உலகிலேயே நீங்கள் ஷஹாதத், ஜிஹாத் பதவிக்குரிய நன்மைகளை அடைந்து விட்டதாக கருதுங்கள். அதை அடக்கிக் கொள்வதே ஜிஹாதே அக்பர் ஆகும்.

"உன்நப்ஸை அடக்கியாளத்திறமை யற்ற நீ, நான் கம்பீர முள்ளதோர் ஆண்சிங்கத்தைக் கொன்றேன். அபாண்டமான தோர் மலைப்பாம்மை அடித்து வீழ்த்தினேன். என்று பலவாறு சொல்லி பிதற்றிக் கொள்வதில் என்னபயன்? (ஓர் கவிஞர்)

23. ஆண்டவனுடைய அடியார்கள் கல்வியைத் தேடுவதில் முயற்சித்து வருகிறார்கள். நீயும் அவ்வாறே செய்.

24. கல்வியைக் கற்றபின் அதைக் கிரியாம்சையில் நடத்திக் காட்டு; இல்லையேல் நீ அசன் சத்தை விட்டெறிந்து தோலை வைத்துக் கொண்டவனைப் போலாவாய்.

தீனை (மார்க்கத்தை) கடைபிடிக்க வேண்டுமானால் வணக்கத்தில் ஈடுபடு. 'ஹக்' என்னும் ஏகத்துவத்தை பெறவேண்டுமானல் உத்தம மஹான்களின் சேர்க்கையில் ஆவலை மேற்கொண்டு அவர்கள் சமூகத்தில் இருக்கத்தொடங்கு.

25. எவனொருவன் ஓர் மரத்தின் கொப்பைமட்டும் பிடித்துக் கொண்டானே அவனுக்கு அக்கொப்பு முறிவதன் காரணமாக கிழே விழுந்துபோக நேரிடும். ஆனால் அடிமரத்தை பற்றிக்கொண்டாலோ அதிலுள்ள கொப்பு கிளைகள் யாவும் அவன் வசமாய்விடும்.

26. இரகசிய சதுகா (கொடை) உண்மை தருமம் என்பது நீ வலதுகையால் கொடுப்பது இடதுகைக்கும் தெரியக்கூடாது என்பதேயாகும். நீ உயரிய பொருளை தருமஞ் செய்துவிட்ட போதிலும்; ஆ! நான் இதைவிட உயரிய பொருளை கொடுத்திருக்கப் படாதா என்று வருந்த வேண்டும்.

27. கஃபாவை நோக்கி எல்லோரும் ஸஜ்தா செய்கிறார்கள். ஆனால் இடையிலுள்ள திரை நீக்கப் பட்டாலோ ஒருவர் மற்றொருவருக்கு சஜ்தா செய்வது நன்கு வெளியாகும்.

28. மஃரிஃபா (மகிமை) என்பது புத்திக்கு எட்டக்கூடியதன்று; அதன் உண்மை விளக்கமோ வெனில் அது புத்திக்கு எட்டாதவாறு இருக்கவேண்டும்.

29. வெளிக்கு இருந்துவரும் சமயத்தில் அல்லா உடைய பேரை மனதில் கொள்ளலாமேயன்றி நாவினால் உரைக்கப்படாதென ஜனங்கள் சொல்லுகிறார்கள், ஆனால் மனம் நாவுயென்ற பாகுபாடின்றியே அவனுடைய ஞாபகம்நம்மில் வியாபித்திருக்கும் பொழுது அதை எவ்வாறு பிரிப்பதென நமக்குப் புலப்படவில்லை.

30 குண தத்துவம் படைத்தவரைக் காட்டிலும் மெய் ஞானம் படைத்தவரை தேடிக்கொள்.

31. பொய்யைத் தவிர்க்காத வரையில் மெய்யை அடைய முடியாது.

32. எவனொருவன் மனத்தாழ்மையை அடைந்தானே அவனே முத்தி ஸ்தானத்திற்கு தகுதி வாய்ந்தவனாவான்.

33 இன்றைய கூலியை நாளை தவணையின்பேரில் வைப்பவன் மதிகேடனாவான்.

34. பிறப்பை யொட்டிய புதுமை உன்னிலும் பழமை. அது இறைவனிடத்திலும் இருந்து வருவதாகும்.

35. ஆத்துமாவை இறைவனுக்கு காணிக்கையாக சமர்ப்பிக்காதவரையில் அவன் வரையிலும் எவ்வாறு எட்டுவது?

36. ஆதியின் புறமாய் நோக்கிச் செல். அங்கு உனக்கு இஷ்க் என்று சொல்லும்படியான உண்மைக்காதல் அடையப்பெறும். நீ அதன் வலையில் சிக்கிக்கொள். அது உன்னை முத்திஸ்தானம் வரையில் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

இஷ்க் பற்றி சொன்னதற்குப் பின்னர் நான் இறுதிநாள் வரையில் முடிவடைய முடியாத இதன் தொடர்ச்சியை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

மனாகிபுல் ஆரிபீனில் வந்திருக்கிறது: மவுலானாவுடைய அரும்பெரும் ஊழியர்கள், ஒருநாள் மவுலானா ஷம்சுத்தீன் அவர்கள் சமூகத்தில் "எங்கள் மவுலானா அவர்கள் உங்களைப்பற்றி அநேக புகழ்ப் பாடல்களை எழுதியுள்ளார்களென்று சொன்னபோது நான் ஒரு மகத்துவமுள்ள அரசனுக்கு உட்பட்டவன். அவ்வரசர் என்னை வானலோகத்திற்குமேல் கொண்டு போனாலும் சரி அல்லது பூமியின் பாதாளத்தில் கொண்டு போய் விட்டாலும் சரியே எல்லாம் அவர்வசத்தில் உள்ள விஷயம் என்றார்கள்.

## மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ் காலத்தியவர்கள்

மவுலானா அவர்கள் காலம் அரும் பெரும் மேதாவிகளையும் நாதாக்களையும் கொண்டுள்ள காலமாக இருந்துவந்தது. தர்வேஷி என்ற அவர்களின் பகிர் தன்மை, தலைசிறந்து விளங்கி வந்தது. பாதுஷாக்கள் அவர்களது பாதங்களை முத்தமிட்டுவந்தார்களாயினும்

அவர்கள் அதற்கு சற்றும் இடங்கொடாது மறைந்து ஓடியாடி வந்தார்கள்.

இக்காலம் ஹிஜ்ரி 7—வது நூற்றுண்டின் காலமாக இருந்தது. மவுலானு ரூம், மவுலானு ஷம்ஸ் தப்ரேஸ், ஷேக் சத்ருத்தீன் கூனவி ஷேக் ஹிஸாமுத்தீன் சல்பி ஷேக் அஹதுத்தீன் கிர்மானி ஷேக் பரீதுத்தீன் அத்தார் ஷேக் முஹம்மதத்தீன் எமனி—ஷேக் நஜ்முத்தீன் ராஜி ஷேக் ஷஹாபுத்தீன் சுஹார்வர்தி ஷேக் சைபுத்தீன் பாகத்தரி ஷேக் சாதிஷீராஜி ஷேக் பக்ருத்தீன் இராகி ஆகிய மகத்துவம் வாய்ந்த நாதாக்கள் யாவரும் மவுலானு ஷம்சுத்தீன் உடைய காலத்திலேயே இருந்து வந்தவர்கள்.

அவர்களின் நல்லுபதேசங்களும் அனுக்கிரகங்களும் அக்காலத்திய வாசிகளுக்கு அடையப் பெற்று வந்ததிலிருந்து அவர்கள் எவ்வளவு அதிர்ஷ்ட சாலிகளாக இருந்திருக்க வேண்டுமென்பது யூகிக்க வேண்டியதாகிறது.

அவர்களில் அநேக மஹான்கள் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் வபாத்திற்குப் பின்னரும் 40, 45 வருஷகாலம் வரையில் ஜீவித்துள்ளார்கள். அநேகர் ஷேக் ஷம்ஸ் தப்ரேஸி அவர்களையும் தரிசிக்கலாயினர்.

## ஷம்ஸ் தப்ரேஸ் விஷய சுருக்கம்

தங்கள் பூர்வீகப் பெயர் ஷம்சுத்தீன். தங்கள் தகப்பனுர் ஜனுப் அலாவுத்தீன் அவர்கள் "கியா புஸர்க்" சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்.

இஸ்மாயீலியா கூட்டத்திற்கு அவர், இமாம் என்ற ஹோதாவில் இருந்து வந்தார். அவர் தம்முடைய முதாதைகளின் மதத்தை விட்டு விட்டார் பிறந்த ஊர் தப்ரேஸ். அவர் தம் பிள்ளைப் பிராயத்தின் விஷயங்களை அடியிற் கண்டவாறு விவரிக்கிறுர்.

நான் அச்சமயத்திலேயே நபி நாயகத்தின் பேரின்பக் காதலை மேற் கொண்டிருந்தேன். அநேக நாள் வரையில் எனக்கு அதன் பொருட்டு பசிதாகமும் இல்லாதிருந்தது. அநேக நாட்கள் அந்நிலைமையில் கழித்து வந்தேன். என் இனபந்துக்கள் ஏதேனும் கொடுக்க விரும்பினுராயினும் நான் அதை வாங்க மறுத்தேன்.

அவர்கள் தம் கடைசி காலத்தை சதா சுற்றுப் பிரயாணத்தில் கழித்து வந்தார். சதா கருப்புக் கம்பளத்தினுலே உடையைத் தயாரித்து அதை அணிந்து வந்தார். எங்கு போனாலும் சத்திரத்திலேயே தங்குவார் அங்குள்ள அறையின் கதவை அடைத்துக் கொண்டு ஆண்டவன் வணக்கத்தில் அமர்ந்து விடுவார். சல்ல காடா பின்னி அதை விற்று தன் காலக்ஷேபத்தை நடத்திக் கொள்வார்.

ஒருவர் தனுக்த முர்ஷிதை அடைவதற்காக பாடுபட்டு அலேவது போலவே ஹஸ்ரத் ஷம்சுக்கும் அரியதோர் முரீதின் அவசியம் ஏற்பட்டிருந்தது. ஒரு தடவை அவர்கள் ஆண்டவனுடைய சமுகத்தில் "இறைவனே! என்னுடைய ரகசிய சேர்க்கையின் உணர்ச்சிகளை பொறுத்துக் கொள்ளும் படியான ஒரு முரீதை தந்தருள்வாய்" என்று துவாச் செய்தார்கள்.

'நீர் ரூம் தேசத்தை நோக்கிச் செல்லும்' என்று இல்ஹாம் வந்தது. உடனே ஷம்ஸ் அவர்கள் ரூம் தேசத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். வழியில் அவர்கள் கூனிவாவை அடைந்து அங்குள்ளதோர் சத்திரத்தில் தங்கலானார்கள்.

இரகசிய கவர்ச்சியின் மூலமாய் மவுலானா ஜலாலூத்தீன் ரூமி அவர்களுக்கு தகவல் கிடைக்கவே, அவர்களை முன் கொண்டழைக்க புறப்பட்டார்கள்.

அந்தரங்க இரகசிய விஷயங்களில் போதிய தேர்ச்சி பெற்றிருந்தார்களாயினும் அவர்கள் மிக்க பேணுதலுடன் கல்விப் பயிர்ச்சி அளிப்பதிலேயே மும்முரமாக வேலை செய்து வந்தார்கள்.

அரும் பெரும் அறிவாளர்கள் தங்களிடம் சந்தேகங்களை வினவி அவர்களின் சிஷ்யர் என்ற ஹோதாவை அடையகாத்துக் கொண்டிருந்தார்கள்.

எனவே அவர்கள் மவுலானா ஷம்ஸ் தப்ரேஸ் அவர்களை சந்திக்கச் சென்ற போது அநேக பிரசித்திப் பெற்ற உலமாக்களும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

இவர்கள் இவ்வளவு கம்பீரத்துடன் மவுலானா ஷம்ஸ் அவர்களின் ஸ்தானத்தை அடைந்த போது, அவர்கள் தம் வீட்டு திண்ணையின் மேல் வீற்றிருந்தார்கள். மவுலானாவை அவர்கள்

கண்டதும், எனக்கு 'இல்ஹாம்' அடையப்பெற்ற மஹான் இவர் தான் என்று உணர்ந்து கொண்டார்கள். சம்பாஷணை ஆரம்பமாயிற்று:—

மவுலானா ஷம்ஸ் அவர்கள் "ஹஸ்ரத் பாயஸீத் புஸ்தாமி அவர்களுடைய பதவிக்கும் நபி நாயகம் (ஸல்) பதவிக்கு மிடை எது மேலானது?" எனக் கேட்டார்கள்.

அதற்கு மவுலானா அவர்கள் நாயகம் (ஸல்) சகல சிருஷ்டிகளிலும் மேம்பாடடைந்தவர்கள். அவர்களுக்கு நிகரில் பாஎஸீத் புஸ்தாமியின் அந்தஸ்து ஒன்றுமில்லை.

ஷம்ஸ் அவர்கள் மீண்டும், பாஎஸீத் புஸ்தாமியோ தாம் உயிரோடிருக்கும் வரையிற் கற்பூசனி பழத்தை புசித்ததில்லை. நாயகம் (ஸல்) அவர்கள் அப்பழத்தை எவ்விதமாக சாப்பிட்டார்கள் என்று தெரியாம லிருந்ததே அதற்கு காரணமாகும்.

அவர்கள் புஸ்தாமி (ரஹ்) அவர்கள் தம்மைப் பற்றி—"என்னுடைய கண்ணியம் உயரியது. நான் சுல்தானுஸ் சலாதீன் (அரசர்களுக் கரசன்) ஆவேன் என்றும் தம்மைப் பற்றி விவரிக்கிறார்கள்.

நாயகம் (ஸல்) அவர்கள் "நான் ஒரு நாளில் 70 தடவை அஸ்தக்பார் ஓதி வருகிறேன்." என்று மொழிந்து வருவார்கள்.

ஹஸ்ரத் பாஎஸீத் புஸ்தாமி (றஹ்) அவர்களுக்கு குறைந்த தாகம் இருந்து வந்தது. ஒரு முடக்கு தண்ணீர் குடித்தாலே அவர்களின் தாகம் தணிந்து விடும். அதற்குமாறாக நாயகம் (ஸல்) அவர்களுக்கு கடுமையான தாகம் இருந்து வந்தது அவர்கள் பல டம்ளர்கள் நிறைந்த ஜலம் பருகின போதிலும் தாகம் அடங்காதிருந்ததே, என்று சொன்னபோது ஷம்ஸ் அவர்களுக்கு ஏற்பட்ட சகிக் கொண்ணாத உணர்ச்சியின் நிமித்தம் அவர்கள் பிரக்ஞையற்றுப் போனார்கள். இதுவே அவர்களின் முதல் சந்திப்பு.

அது 1244 கி. பி. யில் ஏற்பட்டுள்ளது. ஆனால், இதற்கு முன் மௌலானா ஷம்ஸ் அவர்களைக் கண்டார்களாயினும் அவர்களுக்கிடை பேச்சு வார்த்தை நடைபெறவில்லை.

சில நாட்களுக்குப் பின்னர், ஷம்ஸ் (ரஹ்) அவர்கள் மறுபடியும் மவுலானாவின் சபையில் கலந்து கொண்டார்கள். இத்தடவை

மவுலானு அவர்கள் பள்ளிவாசலிலுள்ள ஹவுலுக்கு அருகில் வீற்றிருந்தார்கள். பல கிதாபுகளும் அச்சமயம் அவர்களிடம் இருந்து வந்தன.

"இவை என்ன கிதாபுகள்?" என்று வினவினதும், மவுலானு அவர்கள் அவைகளை எடுத்து ஹவுலில் போட்டுவிட்டார்கள்.

மவுலானு ரூம் அவர்கள் திடுக்கிட்டு, "அந்தோ! தாங்கள் எத்தகைய கொடுமை செய்தீர்கள், அதிலுள்ள சில கிதாபுகள் தேடிச் சென்றாலும் கிடைக்க முடியாதவை" என்று சொல்லி துக்கத்தொனியில் மொழியவே, மவுலானு ஷம்ஸ் அவர்கள் உடனே ஹவுலில் கையைவிட்டு போட்ட கிதாபுகளை வெளியில் எடுத்து மவுலானுவிடம் சேர்ப்பித்தார்கள்.

அவற்றில் ஒரு கிதாபுக்கூட நனையாமல் இருந்ததைக் கண்ட மவுலானு ரூம் அவர்களுக்கு பெரும் ஆச்சரியம் ஏற்பட்டது. "நண்பரே! இவை ஏன் நனையவில்லை?" என்று வினவ, "இது தான் ஸொகோஹால் என்னும் மஃரிபத் என்னும் தர்ஜாவைச் சேர்ந்துள்ளது. தங்களுக்கும் அதற்கும் யாதொரு சம்பந்த மில்லை."

இனி மவுலானுவுக்கு ஷம்ஸ்பால் ஏற்பட்டுள்ள விசுவாசம் பன்மடங்கு அதிகரித்தது. எந்நேரமும் ஷம்ஸ்உடைய சமூகத் திலேயே இருக்கத் தொடங்கினர்கள்.

நேயர்கள் செவ்வனே தெரிந்துகொள்ளும் பொருட்டு அவ் விஷயங்கள் இங்கு வரையப்படுகின்றன. அதாவது:—

பரம இரகசியங்கள் நிலைகொள்ளுவதற்கு நீண்ட காலம் பாடு பட்டு வரவேண்டிய இடத்தில் மவுலானு அவர்களின் சேர்க்கை யானது, அவர்களை தக்ஷணமே அருளுக்குள்ளாக்கியது. இந்த இரண்டு மவுலானுக்களும் 6 மாத காலம் வரையில் அல்லாஹ் உடைய தியானத்திலும் ஓர் தனி அறையில் காலங்கழித்து வந் தார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸலாஹுத்தீன் ஜர்கோப் ஹுஜராவில் அவர்கள் தங்கியிருந் தமையால், வீட்டுக்காரர் மாத்திரம் அங்கு செல்வதற்கு அனு மதிக்கப்பட்டிருந்தார்.

அவர் மூன்று மாத காலம் வரையில் அதே ஹுஜராவில் அவருடன் காலங்கழித்து வந்ததாக முனகிபுல் ஆரிபீன் என்ற கிதாபில் வரையப்பட்டிருக்கிறது.

இக்காலம் முதற்கொண்டே மவுலானா உடைய நிலைமையில் விசேஷ மாறுதல் ஏற்பட்டதாகவும், அக்காலம் வரையில் ஒருவருக்கும் சிஷ்யராயிராத மவுலானா அவர்கள் மவுலானா ஷம்ஸுக்கு சிஷ்யராகி விட்டதைக்கண்ட ஜனங்களுக்கு பெரும் ஆச்சரியம் ஏற்பட்டது. ஆயினும், மவுலானா அவர்கள் அதைப்பற்றி கிஞ்சித்தும் லக்ஷியம் செய்ய வில்லை.

அவருடைய மாருதல்களுக்கிடை. அவர் சமா உடைய மஜ்லீஸில் கலந்து கொண்டதே யாவற்றிலும் விசேஷமாக இருந்தது. சமாவை வெறுத்து வந்த அவருக்கு இப்போது சமாவின்றி நேரத்தைக் கழிப்பது கடினமாகவிருந்தது. எங்கேனும் ஒரு சுத்தி அடிக்கப்படும் சப்தம் அவர் செவிகளுக்கு எட்டுமாயின், அதுவும் அவர் சமா சத்தமென நினைக்கும்படியாயிற்று.

மவுலானா ரூம் அவர்கள் சதாதம் முரீதுகளுக்கு நஸீஹத்துச் செய்வதிலும் தம்மாணவர்களுக்கு அரும் பெரும் கிதாபுகளின் பாடங்களை புகட்டுவதிலும் சதா ஈடுபட்டு இருந்தவர்கள். இப்போது அவைகளெல்லாம் தவிர்த்து விட்டதைப் பார்த்த நகரவாசிகளுக்கிடை எங்கு பார்த்தாலும் அவரைப் பற்றியே துவேஷமே ஏற்பட்டுவிட்டது. முரீதுகளும், மாணுக்கர்களும் அதைப் பற்றி ஒன்றுகூடி பேசியபோது ஷம்ஸ் வருகையே இதற்குக் காரணமென்றும், அவர் போய்விடுவாராகில் மவுலானா மீண்டும் தங்களை முன்போல் கவனிக்க ஏதுகரமாய் விடுமென்றும் தீர்மானித்தார்கள்.

பொது மக்களின் துவேஷம் முற்றிப்போய்விடும் பக்ஷத்தில் அது தனக்கு மட்டுமன்றி நகரவாசிகளுக்கிடையும் கிளர்ச்சிக்குக் காரணமாய் விடுமென்றெண்ணி அவர்கள் திமஷ்க் போய்ச்சேர்ந்தார்கள்.

மவுலானா ரூமோவெனில், மவுலானா ஷம்ஸ் புறப்பட்டுப்போய் விட்டார் என்ற துக்கத்தின் பேரில் ஒருவரையும் சந்திக்காமல் தனியே இருந்து கொண்டு நேரத்தைக் கழிக்கலானார்.

மாணுக்கர்கள் மட்டுமென்ன? அவர்களுடைய முரீதுகளுக் குங்கூட மவுலாஞு அவர்கள் பேட்டியளிக்க மறுத்து விட்டார். நீண்டகாலத்திற்குப் பின்னர், மவுலாஞு ஷம்ஸ் திமஷ்கிலிருந்து மவுலாஞு ரூமுக்கு ஓர் கடிதம் எழுதி அனுப்பினுர். அக்கடிதத்தின் சமாசாரம் எரியும் நெருப்பின்மீது எண்ணை ஊற்றினதற்கொப்பா யிருந்தது.

அச்சமயத்தில் மவுலாஞு ரூம் அவர்கள் எழுதிய பாடல்களி னின்றுமே அதற்குரிய அத்தாட்சிகிடைக்கப் பெறுகிறது.

பகீர்களுடைய நாவும் உள்ளமும் ஒன்று அதாவது:- யா தொன்று அவருடைய உள்ளத்தில் இருந்துவந்ததோ அதுவே அவருடைய மொழிகளினின்றும் வெளியாய்வந்தது. அந்த கவி களைப் படித்து அவற்றின் பொருளை யுணர்ந்த பகைவர்கள் உள்ளங் களில் நல்லுணர்ச்சி ஏற்பட்டதன் பேரில் எல்லோரும் வெட்க மடைந்து மவுலாஞு உடைய சமுகத்தில் வந்து மன்னிப்பு கேட்கும் படி யாயிற்று.

அதையடுத்து மவுலாஞு அவர்கள் ஷம்ஸை மீண்டும் அழைத்து வரஎண்ணினுர்கள். அதைப்பற்றி பொதுமக்களுக்கிடை தர்க்கமும், விவாதமும் நடைபெற்றன. மவுலாஞுவை அழைத்து வரலாம் என்று தீர்மானம் நிறைவேறியது.

திமஷ்க்சென்று அவரை கூப்பிட்டுவரும் தூது கோஷ்டிக்கு மவுலாஞு உடைய சிரேஷ்ட குமாரர் சுல்தான் வலத்தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மவுலாஞு ரூம் கடிதசமாசாரத்தை பாரஸீக கவிகளிலேயே எழுதி அதை கோஷ்டியினர் கையில் கொடுத்தார்.

திமஷ்க் சென்ற கோஷ்டினர் முதலில் மவுலாஞு ஷம்சுக்கு நேரில் சலாம் செய்தபின்னர் அக்கடிதத்தை சமர்ப்பித்து மன்னிப் புக்குரிய வார்த்தைகளையும் பேச ஆரம்பித்தபோது, மவுலாஞு அவர்கள், நீங்கள் அதைப்பற்றி ஒன்றும் பேசவேண்டிய அவசிய மில்லை; எனக்கு மவுலாஞு உடைய கடிதமே போதுமானது. என்று பதிலளித்தார்கள். பின்பு ஷம்ஸ் அவர்கள் தம்மிடத்திற்கு வந்த வர்களை தம்விருந்தினராக ஏற்று பின்னர் கொஞ்சம் நாட்கள்சென்ற பின் அவர்களுடன் கூனியாவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

சுல்தான் வலத் ஷம்ஸ் குதிரையின் கடிவாளத்தைப் பற்றினவர்களாகவே கூனியாவரையில் வந்தார். மற்றவர்கள் யாவரும் வாகனம் ஏறி வந்தார்கள்.

மவுலானு ஷம்ஸ் அவர்களின் வருகையின் தகவல் மவுலானுரூமுக்கு எட்டியது. அவர் தம் தோழர்களுடன் முன்சென்று மிக்க குதூகலத்துடன் மவுலானுவை வரவேற்றினர்கள். அதற்கப்பால் நீண்ட காலம்வரை இவ்விருமஹான்களின் சேர்க்கையும், வாசமும் ஒரே இடத்தில் ஏற்பட்டிருந்தமையால் மவுலானு ரூம் அவர்கள் மவுலானு ஷம்ஸ் மூலமாய் அநேக பரம இரகசியங்களை அடையப் பெற்றூர்கள்.

இந்த நிகழ்ச்சிக்கப்பால் ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் மவுலானுரூமின் வளர்ப்புப் புத்திரியாகிய கீமியாகாதூன் நாமமுள்ள பெண்ணுடன் நிக்காஹ் செய்துகொண்டார். அவர்கள் வாசத்திற்காக மவுலானுரூம் தம்வீட்டுக்குள்ளாகவே சிறியதோர் கூடாரத்தை அமைத்துக் கொடுத்தார்கள்.

மவுலானுஉடைய 2வது குமாரர் அலாவுத்தீன் மவுலானுவை பார்க்கவரும பொழுதெலலாம் கூடாரத்திற்குள் நுழைந்தேவந்தார். இது மவுலானு ஷம்ஸுக்கு அதிருப்தியாக இருந்தது. அதனுல் அவர்கள் மவுலானு ஷம்ஸை அப்பாதையின் வழியே செல்ல வேண்டாமென எச்சரித்தார்கள்.

ஆதன்மீது அல்லாவுத்தீன் அச்சிறிய விஷயத்தை ஏற்கெனவேயுள்ளபகைவர்களுக் கெதிரில் ஒன்றுக்கு பத்தாக திருத்திக் கூறினர். இதன் விளைவாக மவுலானு ஷம்ஸ் இனி தாம்போனுலுங்கூட திரும்பிவரலாகாதென தீர்மானித்து அப்படியே ஒருவருக்கும் சொல்லாவண்ணம் மறைந்து விட்டார்கள்.

மவுலானு அவரைத் தேட பலரை பலவிடங்களுக்கு அனுப்பி வைத்தார். ஆனல் எங்கும் தடயம் கிடைக்கவில்லை. கடைசியாக மவுலானு அவர்கள் தாமே தம் முரீதுகளுடனும் இதர தோழர்களுடனும் புறப்பட்டுப் போனுர்கள்.

திமஷ்க் சென்று அங்கே சில நாட்கள் தங்கினுர்கள். பலவாறு பலவிடங்களில் தேடியும் கிடைக்காமேம். கூனியாவுக்கு திரும்பி வந்தார்கள்.

மற்றொரு ரிவாயத்து :—ஹஸ்ரத் ஷம்ஸ் உடைய மனைவி கிமியா காதூன் ஒரு தடவை கணவன் அனுமதியின்றி வெளியிற் சென்று விட்டார். அதனால் ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸுக்கு கோபம் உண்டாயிற்று. அதன்பொருட்டு அவர் மனைவி மூன்று நாட்களுக்குள்ளே நோயுற்று காலமானார். அவர் காலஞ் சென்றபின் ஹஸ்ரத் ஷம்ஸ் திமஷ்க் சென்று விட்டார்கள்.

ஹஸ்ரத் ஷம்ஸ் ஹஸ்ரத் மவுலானாரூம் உடைய மூலாகத்து கூனியா நகரில் டிஸம்பர் 1244-ல் ஏற்பட்டதென்று மேலே கூறியுள்ளோம்.

மார்ச் 1245-ல் மவுலானா ஷம்ஸ் உடைய அகாலமரணம் அவ்விருவர்களின் உத்தமசேர்க்கைகளை சிதறுண்டு பண்ணியது. இக்கணக்கிற்கேற்ப அவ்விருவரின் சம்மந்த காலம் 15 மாதங்களென அறியக்கிடக்கின்றது.

ஷம்ஸ் தப்ரேஸ் அவர்கள் மரணத்திற்குப்பின் மவுலானா உடைய நிலைமையில் பெரும் மாறுதல் ஏற்பட்டுள்ளது. அவர்கள் அவரது பிரிவினையைக் குறித்து சதாசஞ்சலமடைந்து வந்தார்கள்.

கடைசியாக ஸலாஹுத்தீன் சர்கோப் சேர்க்கை அவர்களுக்கு சற்று ஆறுதலை அளித்த தன்பேரில் அவருடைய சஞ்சலங்களில் சற்றுகுறைவு ஏற்பட ஆரம்பமாயிற்று. மஸ்னவி என்னும் பாரஸீக பாடபுத்தகத்தின் ஆரம்பம் இங்கிருந்தே உதயமாகிறது.

## பாயஸீத் புஸ்தாமி

மவுலானாஷம்ஸ் அவர்கள் பாஎஸீத் புஸ்தாமி கபி பெருமான் அவர்களுடைய புசித்தல் முறை தெரியாததால் தம் ஆயுள் முழுதும் கற்பூசனிப் பழத்தை தின்னவில்லை யெனமேல் கூறப்பட்டுள்ளது.

இனி அதை யொட்டி ஹஸ்ரத் பாஎஸீத்புஸ்தாமி அவர்கள் யார்? எப்படிப்பட்டவர்கள் என்பது பற்றியும் சற்று தெரிந்து கொள்ளலாம்.

ஹஸ்ரத் ஜிப்ராயீல் (அலை) அவர்கள் மலாயக்களுக்கிடை முதன்மை வாய்க்திருப்பதைப் போலவே ஹஸ்ரத் பாஎஸீத் புஸ்தாமி அவர்களும் தஸவ்வுப் படைத்தவர்களுள் முதன்மைவாய்க்துள்ளார்கள்.

ஒருவர் இருநூறு வருஷகாலம் மாரிபத்துறையில் பாடுபட்ட பிறகு அடையக் கூடிய பலனை அவர்கள் தம் ஆரம்ப நிலையில் அடைந்து விட்டார்கள்.

பாயஸீத் புஸ்தாமி ஒருதடவை ஹஜ்ஜுக்குப் போகும் போது வழியில் ஒரு ஏழை சந்தித்து "நான் பிள்ளைக்குட்டிக்காரன் கஷ்டத்தில் சிக்குண்டு கிடக்கிறேன். தங்கள் ஹஜ்ஜு செலவை தாங்கள் எனக்கு அருள் புரிந்து அந்த நன்மையை என்விஷயத்தில் அடைந்து கொள்ளுங்கள்" என்று சொன்னபோது தாங்கள் அப்படியே செய்தார்கள்.

ஓர் யூதருடைய வாசம் இவருடைய அயலில் ஏற்பட்டிருந்தது. அந்த யூதர் சில நாள் வரையில் அயலூருக்குச் சென்று விட்டார். அவர்மனைவி செலவுக் கஷ்டத்தினால் வீட்டிற்கு விளங்குக்கு ஏற்றவும் முடியாதிருந்தார். அவரது சிறு குழந்தை இருளைக் கண்டு பயந்து அழுவதைப் பார்த்த ஹஸ்ரத் அவர்கள் தம் வீட்டு விளக்கைக் கொண்டு போய் அங்கே வைத்து விட்டு தாம் இருளில் வீற்றிருந்தார்கள்.

அவர்கள் முதல் தடவை ஹஜ்ஜுக்குப் போயிருந்த போது மதீனாவுக்கு போகவில்லை. காரணம் வினவப்பட்டது. ஹஜ்ஜின் ஆதரவில் மதீனாவுக்குப் போக என மனம் சம்மதிக்க வில்லை. இன்ஷா அல்லா அடுத்த வருஷம் தனியே ஜியாரத்துச் செய்வேன் என்றார்கள்.

ஒரு தடவை பயித்தியக்காரனைப் போன்ற யொருவர் வானத்தைப்பார்த்து அல்லாவே! என்னைப்பார். என்று சொன்ன போது "என்ன ? உன் அமலுகள் நல்லபடியாக இருந்தால் தானே அல்லா உம்மைப் பார்ப்பான்" என்று ஹஸ்ரத் சொல்லவே, அவர் அல்லாவுடைய பார்வை என்மீது பட்டால் என் அமுலுகள் சீர்ப் பட்டு விடும், என்றார்.

ஒருமுறை ஹஸ்ரத் இமாமுக்குப்பின் தொழுகை தொழுது விட்டப்பிறகு, இமாம் அவரைப் பார்த்து, தங்கள் ஜீவனம் எப்படி நடக்கின்றது? என்று கேட்டார். நான் மீண்டும் ஒரு முறை தொழுது கொண்ட பிறகு தான் இதற்குபதில் கூற முடியும் என்றார்கள். "ஏன் அப்படி?" என்று இமாம் கேட்க ஜீவனத்தை

தந்தருள்பவனை உணராதவருக்குப்பின் தொழுது கொள்வதனால் தொழுகை நிறைவேராது என்று விடை பகரப்பட்டது. "அல்லாவைத் தேடவானத்திற்குப் போகவேண்டிய அவசிய மில்லை. அவன் உடைந்த உள்ளங்களில் தென்படுபவன். வானவர்கள் பூமியின் மேலுள்ள உடைந்த உள்ளங்களைதேடிக் கொண்டு திரிகிருர்கள்.

"பாமரர்கள், தோலினால் செய்யப் பட்டஎனது பழைய உடையை வாங்கி அதைவைத்திருந்தால் பரக்கத் தென்று கருது கிருர்கள். அவர்கள் தங்கள் அழுலுகளையே சீர்ப்படுத்திக் கொள்ள முயற்சித்தால் அதைக்காட்டிலும் எவ்வளவு மேலாகும்."

அல்லாஉடைய தரிசனைக் கெதிரில் சுவர்க்கத்தை அற்பமாக நினைப்பவர்களே அவனுடைய உண்மை அடியார்களாவர்.

அல்லா உடைய மாரிபத்தின் சுவையை அறிந்தவர் சுவர்க்க பாக்கியத்தை விரும்பமாட்டார். கல்வியைக்கற்று அதன் மூலம் லௌகிக கண்ணியத்தை மட்டும் அடைய விரும்புவோரின் சேர்க்கையில் உட்கார வேண்டாம். ஏனென்ருல் அவரது கல்வியறிவு அவரையே நேர்வழிக்கு கொண்டுபோக முடியவில்லை. அப்பேர் பட்டவர்கள் உங்களுக்கு என்ன வழி காட்டப்போகிருர். அல்லாவுடைய அடியான அவனை விட்டும் எட்டியிருக்கும் வரையில் அவன் முணுமுணுத்துக் கொண்டே யிருப்பான்.

எவ்வளவுக்கெவ்வளவு அவன்ஞாபகம் அவனில்ஸ்திரம் அடையுமோ அவ்வளவுக் கவ்வளவு அவன் மௌனஞ் சாதித்துக் கொள்வான். கெட்டவர் சேர்க்கை கெட்டகருமங்களைவிட கெட்டது. முயற்சித்தபின்னர் அல்லாவுடைய நம்பிக்கையின்பேரில் ஆதாவுவையுங்கள். உங்கள் முயற்சிக்காக செருக் கடையாதீர்கள்.

அல்லாவுடைய நன்றியை பாராட்டுதலும், மக்களை கண்ணிய படுத்தலும் ஆக இவ்விரு நன்மைக்குரிய பழக்கங்களும் விபத்துகளினின்றும் உன்னைக் காக்கும். கதரிகதரி வானத்தை பிளக்க செய்து ஆண்டவனிடம் உதவிநாடுகிறவன் பிரயோசன மற்றவன். அவன் ஆசை பொய்யாசையானது. சமுத்திரத்தண்ணீர் ஒரேயிடத்தில் மௌனமாய் நிலைகொண்டு இருககிறது. ஆனால் அதனுள் விலைமதிக்கொண்ணுத முத்துகள் மறைந்து கிடக்கின்றன.

எவனொருவன் கர்வத்தின பொருட்டு மக்களுடன் பேசவும் சம்மதியாமல் சகினேயின் மூலம் தன் வேலையை நடத்திக் கொள்கிருனே அவன் ஆண்டவன் சந்நிதானத்தை விட்டும் எட்டியவனுகிருன்.

எவனொருவன் மக்களுடைய சேர்க்கையில் இருந்து அவர்களுடன் நெருங்கிப் பழகி எல்லாவிதமான கஷ்டங்களையும் சகித்து அவர்களின் நன்மைக்காக பாடுபடுகிருனே அவனே அல்லாவை கிட்டியவனுவான்.

உன்னேடு கெட்டவன் சேர்க்கை ஏற்பட்டால் நீ உன் நன்னடத்தையைக் கொண்டு அவனில் உன் உணர்ச்சியை ஏற்படுத்துவாய். உன்மீது துன்பம் விளைந்தால் தாழ்மைத் தனத்தை வெளிப்படுத்துவாய். துன்பத்தின்போது பொறுமையைக் கடைபிடிப்பது அவசியமாகும்.

இறைவனே! நான் தன்னந்தனியே இருந்தபோது என் எடை மிகதம் குறைவாக இருந்தது. நான் உன்னில் கலப்பை ஏற்படுத்திக் கொண்டபின்னர் என் எடை எவ்வளவு அதிகரித்துவிட்டது. நான் பல்லாண்டுகள் வரையில் இறைவனே! எனக்கு இதைக் கொடு அதைக்கொடு என்பதாக கேட்டுவந்தேன். ஆனுல் உனக்குரிய பகுத்தறிவு எனக்கு ஏற்பட்ட பின்னரோ நான் அவைகளை எல்லாம் ஒருவாறு மறந்துவிட்டேன். இப்பொழுது இறைவனே! நீ என்னை என்னுடையவனுக்கிவிடு. உன் சம்மதத்திற் கிணங்க நான் ஒழுகும்படியான நல்லெண்ணத்தை தந்தருள்வாய்!" என்று உன்னிடம் வேண்டிக் கொள்கிறேன்.

இன்னவிடத்தில் ஒரு மஹான் வந்திறங்கி இருக்கிருர் என்று கேள்வியுற்று ஹஸரத் அவர்கள் அவரிடம் சென்ருர்கள். சமயோசிதமாக அவர் எதிரில் தென்பட்டார் அப்போது அவர் கிப்லா புறமாக நோக்கி, எச்சில் துப்பினுர். அது இவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவரை சந்திக்காமலேயே திரும்பிச் சென்ருர்கள். (பாஎஸீத் புஸ்தாமி)

அல்லாவுடைய ஒலிமார்களுக்கிடை மூன்று லக்ஷணங்கள் ஆகின்றன :—

1. தருமம்:- கடலைப்போன்றது. 2. பட்க்ஷம்:- சூரியனுக்கொப்பானது. 3. மனத்தாழ்மை:- பூமிக்குச் சமமானது.

அல்லாவுடைய பாக்கியங்களைப் பெற்று செருக்கடையாதீர்கள். பல்வேறு கஷ்ட நஷ்டங்களை பொறுமையுடன் சகித்துக் கொள்ளுங்கள் சௌகரியத்தை அசௌகரியமாக்கவும், அசௌகரியத்தை சௌக்கியமாக்கவும், இறைவனது அற்புசக்தியில் உள்ளது.

ஒருதடவை ஹஸ்ரத் அவர்களுடைய பீர்சாஹிப் மேல்மாடத்திலுள்ள கிதாபொன்றை எடுத்து வருமாறு அவருக்குச் சொன்னார். அப்போது அவர் ஹஸ்ரத் அவர்களே! நான் தங்களுக் கெதிரில் ஒருநாளும் தலை தூக்கினவனல்ல. இப்பொழுது தங்களுக் கெதிரில் மேல்மாடத்தை எவ்வாறு தலை தூக்கிப் பார்ப்பது என்று முறையிட்டார்கள்.

ஹஸ்ரத் அவர்கள் இரவு தோறும் 4 ரக் ஆத் நபில் தொழுதவுடன் சலாம் சொல்லிவிட்டு முக்கியமான தொழுகை நிறைவேறவில்லை என்பார்கள். அப்பால் 4 ரக்ஆத் தொழுததும் இது அங்கிகாரத்திற்கு ஏற்ற தொழுகையில்லை யென்று சொல்லிவிட்டு மீண்டும் தொழுவார்கள். இதேவிதமாய் விடியற்காலை ஆகிவிடும். அப்போது காலை நேரத்தில், இறைவனே! நான் உன்னுடைய மாக்ஷிமைக்குத் தக்கபடியான சஜ்தா செய்ய வேண்டுமென்று எண்ணினேன். ஆனால் என்னால் அது சாத்தியப் படவில்லை. என் சஜ்தாவும் என்னைப் போலவே இருந்துவிட்டது. என்பார்கள்.




ஹஸ்ரத் ஷம்ஸ் தப்ரேஸ்

முற்றுப் பெற்றது.



# யூனானி வைத்திய முறைகள்.

(தமிழில்)

இந்த புஸ்தகம் பல உர்து கிதாபுகளிலிருந்து சேகரிக்கப்பட்டு தமிழில் மொழி பெயர்த்து எழுதப்பட்டது.

இதில் மனிதனுக்கு வரக்கூடிய நோய்களை பல தலைப்புகளுக்கு அடியில் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தலைப்புக்கும் அடியில் வரும் அநேக நோய்க்கும் பலவித மருந்துகள் கூறப்பட்டு இருக்கின்றன. இந்த மருந்துகள் நமது வீட்டிலேயே சொர்ப்ப செலவில் தயாரித்துக் கொள்ளக் கூடியவைகள். இதில் கூறப்பட்ட தலைப்புகள் :—

சிரசு சம்மந்தப்பட்ட நோய்கள், சரீர சம்மந்தப்பட்ட நோய்கள், தாது சம்மந்தப்பட்ட நோய்கள், பல்வேறு விஷங்களுக்கு பல்வேறு சிகிச்சைகள், மூலத்திற்கு பல்வேறு பாகங்கள், கழுத்து சம்மந்தப்பட்ட நோய்கள், காச சம்மந்தப்பட்ட நோய்கள், தோல் சம்மந்தப்பட்ட நோய்கள், பல்வேறு நோய்கள்.

இதில் குறிக்கப்பட்ட எல்லா நோய்களுக்கும் மருந்துகள் சொல்லப் பட்டிருக்கின்றன. சில இடங்களில் ஒரே நோய்க்கு சுமார் 40, 50, மருந்துகள்வரை கொடுக்கப்பட்டு இருக்கின்றன. இதில் உள்ள விஷயங்களுள் சில :—

அக்ரோட், அடிபட்ட நோய்களுக்கு, அதிக சம்போகம், அக்கிமாலை, அபாபீல, அபினி பழக்கத்தை அகற்ற, அம்மைக் குறிய சிகிட்சை, அரிசி திப்பிலி, அரை தலைவலி, அவயவங்களில் உண்டாகும் வலி, கடுக்கம், வாதம் முதலிய வைகளுக்கு, அன்னாசி பழத்தின் ஷர்பத், ஆகாரம் ஜீரணம் ஆக, ஆடாதொடை, ஆமணக்கஞ்செடி, ஆமையின் பித்தம், இஞ்சி ஜவாரிஷ், இடுப்பு வலிக்கு இத்ரீபல் கபீர், இத்ரீபல் கஷ்னீஸி, இரத்த பேதிக்கு, இருமல், இரப்பை நோய்களுக்கு, ஈளை இருமல், ஈறுகளில் சீழ் வருதல், ஈறு வீக்கம், உரோமங்கள் கொட்டிப்போனால், உரோமங்களை கருப்பாக்கும், உள்ளங்கையில் தோல் உரிதல், தடித்தல், உஸ்தகுத்தூஸ், எட்டிக்கொட்டை உட்கொள்ளும் விதம், எப்பொழுது தண்ணீர் குடித்தல் கூடாது?, எரிச்சலுக்கு, எருக்கன் செடி, எலி கடிக்கு எலி புழுக்கை, எலுமிச்சம் ஷர்பத், எள்ளு, ஓமட்டலை நீக்க, ஓமம் ஜவாரிஷ், ஓரிலைத்தாமரை.

கக்கத்தின் நாற்றத்திற்கு, கட்டியை பழுக்க வைக்க, கண் சிகப்புக்கும் எரிச்சலுக்கும், கண்டமாலை, கண் நோய், கண்

பார்வை சக்தி, கண் புழுக்கல், கந்தகத்தைலம், கபம் நிவர்த்தி, கபஜுரத்திற்கு, கரியபோளம், கருஞ்சீரகம் ஜவாரிஷ், கரும்தேமலுக்கு, கர்ப்பம் தரிக்க, கர்ப்பம் தரிக்காதிருக்க, கலைமான் கொம்பு, கழுத்து சம்மந்தப்பட்ட நோய், காச சம்மந்தப்பட்ட நோய், காதில் கிருமி நீக்க, காதில் பூச்சி விழுதலுக்கு, காதுக்குள்ளிருந்து புண் சீழ் வருதல், காது நோய், காது மந்தம், காயங்களை ஆற்ற ரணக்களிம்பு, காய்ச்சல், கிருகிருப்புக்கு, குடலை மிருதுவாக்கும், குடல் வேக்காட்டிற்கு, குரங்கு கடிக்கு, குழந்தைகளின் பக்கசூல வலிகளுக்கு, குழந்தைகளின் கிருமி உபத்திரவத்திற்கு, குழந்தைகளின் சுவாச நோய்க்கு, குழந்தைகளின் வயிற்றுப் போக்கிற்கு, குழந்தைகளுக்கு பச்சை நிறமாய் வெளிக்குப் போவது, குழந்தைகள் துக்கத்தில் பயப்படாதிருக்க, குளவி விஷத்திற்கு, குன்றிப்போன கண் பார்வைக்கு, குஷ்டத்திற்கு, கை கால் வெடிப்பிற்கு, கொசு உபத்திரவத்திற்கு.

சளி, சம்போகம், சரீர சம்மந்தப்பட்ட நோய், சரீரத்தைத் தடிப்பாக்க, சரீரத்தை மெல்லியதாக்க, சலாசய நோய்க்கு, சிரங்கிற்கு, சிறுவர் வயிற்று சிக்கல் நீங்க, சீதத்தினால் உண்டாகும் வலிக்கு, சீதபேதி, சீதள தேகத்தோரின் வெட்டை நோய் தீர, சீதளம் வலிகளை நிவர்த்திக்க, சுவாச காசம், சுளுக்கிற்கு, சூதகக் காலங்களில் ஏற்படும் வலிக்கு, சூதகத்தடை நிவர்த்தி, சூலக்கட்டு, சொரி சிரங்கிற்கு, சோர்வுக்கு சிகிச்சை, தலை காயம், கொப்புளம், சிரங்கு புண்களுக்கு, தலை மயக்கம், தலையின் பேன் நீங்க, தலை வலிக்கு, தாகத்தை அடக்க, தாது சம்மந்தப்பட்ட நோய், தாது நஷ்டம், தாது நஷ்டத்தால் ஏற்படும் நரம்பின் சோர்வுக்கு, தாது புஷ்டிக்கு, தாது விர்த்திக்கு, தாய்க்குப் பாலை குறைக்க, தாய்க்குப் பால் அதிகரிக்க, தீபட்டு வெந்து போனால், துடை சிரங்கிற்கு, துடை வலி, தும்பலுக்கு, துர்நாற்ற முள்ள புண்ணுக்கு, தேமலுக்கு, தேள் கடிக்கு, தேள் கொடிக்கி. தொண்டைக் கம்மலை நீக்கும், தோல் சம்மந்தப்பட்ட நோய், தோல் வெடிப்பிற்கு.

நகரோகம், நடுக்கு ஜுரத்திற்கு, நரம்புகளுக்கு சக்தியுண்டு பண்ணும், நரம்பு சிலந்திக்கு, நாக்கு பூச்சிகளுக்கு, நித்திரை வராதிருக்க, நித்திரை வருவதற்கு, நீர் தடைபட்டுப் போனால் பிரிக்க, நீரில் இரத்தம் வருவதற்கு, நீரிழிவு ரோகத்திற்கு

நெஞ்சுவலி, நெருப்புப்பட்டு வெந்து போனால், பசி யெடுக்க, பல் ஆடுவதைக் கெட்டிப் படுத்தல், பல் இரத்தம், பல் நோய், பல் பூச்சி நீக்கல், பாம்பு கடிக்கு, பாலர்களின் தாகவரட்சிக்கு, பாலர்களுக்கு பல் முளைக்கும் போது வெளிக்குப் போவதற்கு, பாலர் விக்கலுக்கு, பித்த ஜுரத்திற்கு, பிரசவத்திற்கு பின் ஏற்படும் வலி நிவர்த்தி, புண்ணுக்கு, பேன் நீங்க, மர்மஸ்தான புண்ணுக்கு, மர்மஸ்தான விரிவை ஒடுக்க, மலச் சிக்கலை நீக்கும், மலடு ஆணிலா பெண்ணிலா என்று அறிய, மலப்போக்கை நிறுத்த, மறதி, மனச்சோர்வுக்கு, மனத் துடிப்புக்கு, மனித எலும்பு.

மாதர்களின் மர்மஸ்தான விரிவை ஒடுக்க, மார்பு தளராதிருக்க, முகத்தில் தோன்றும் கருந்தேமலுக்கு, முகப்பருவுகளுக்கு, முகவீக்கத்திற்கு, முதுகு வலி, முறைக் காய்ச்சலுக்கு, மூக்கின் துர்நாற்றத்திற்கு, மூக்கின் வரட்சிக்கு, மூக்கு இரத்தத்திற்கு, மூச்சு பிடிப்பு, மூலத்திற்கு, மூளைக்கு வலிமை, யாருடன் சம்போகம் கூடாது, வசகாவி, வண்டு கடி, வயிற்றின் வாயுவை நீக்கும், வயிற்றுக் கட்டி, வயிற்றுப் புசம் நீங்கும், வயிற்றுப் பூச்சி, கிருமிகளுக்கு, வயிற்று வலிக்கு பூச்சு, வலி, வீக்கத்திற்கு, வாகை வாதத்தால் வாய் கோணிப் போவதற்கு, வாதத்தைக் கேட்கும், வாந்தி பேதி, வாயு, அஜீரணம் நிவர்த்தி, வாயு நிவர்த்தி, வாயு வலி, வாதம், வாயு வாதம், வாயுவைக் கண்டிக்கும், வாய் நாற்றத்தை போக்க.

விக்கலுக்கு, வியர்வைக்கு, வியர்வை நாற்றத்தை போக்க, விரைகளின் மேல் உண்டாகும் காயங்களுக்கு, விரை வாய்வுக்கு, விரை வீக்கத்திற்கு, விலாபக்க வலி, விஷக் கடிகளுக்கு, விஷம் அருந்தியவனுக்கு, வெடிப்பிற்கு வெட்டை நோய்க்கு, வெண் சிட்டை, வெண் குஷ்டம், வெந்து போன காயங்களுக்கு, வெள்ளை வெட்டைக்கு, வெறிநாய் கடிக்கு வேக்குறுவுக்கு, ஜலதோஷத்திற்கு, ஜீரண சக்தியை உண்டாக்கும், ஜுரத்திற்கு, ஸ்கலிதத்தை தடுக்க, ஸ்கலித மாவதற்கு.

இந்த புஸ்தகம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது என்று சொல்ல அவசியம் இல்லை 282 பக்கங்கள் கொண்டது. கலிகோ பைண்டு செய்யப்பட்டது.

இதன் விலை ரூ. 3—0—0

Printed at Shahul Hameedia Press, Madras.

3

# பத்ஹுர் ரஹ்மான் பிஃபிக்ஹில் ஹும்மான்.

(ஹனபி மதுஹபுக் குரியது)

பிரயோஜனமான கல்வி பிரயோஜன மில்லாத கல்வி என்று இரண்டு வகையுண்டு. உலக வாழ்வைமட்டும் நமக்கு எடுத்துச் சொல்லுவது பிரயோஜன மில்லாத கல்வி. நாம மனமும் ஒழுக்கமும் சீர் பெற்று மறுமையில் நமக்கு ஈடேற்றம் தரக் கூடியதே பிரயோஜனமான கல்வியாகும்.

இந்நூல் இஸ்லாத்தின் தத்துவங்களையும், அனுஷ்டான ஒழுக்க முறைகள் என்னும் பிக்ஹு மஸ்அலாக்களையும் கற்றறிந்து அமல் செய்ய வேண்டியது ஒவ்வொரு முஸ்லி முடைய கடமையாகும். இதுதான் இம்மை, மறுமை இருலோகத்தில் பிரயோஜனம் தரவல்லது.

இந்த நூலில் ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து ஒழுக வேண்டிய விஷயங்களும் அடங்கி யிருக்கின்றன. உதாரண மாக ஈமான், இஸ்லாம், கலிமா, பரிசுத்தம், தொழுகை, ஜும்ஆ மகிமை, ஜியாரத்துல் குபூர், ஜக்காத், நோன்பு, ஹஜ்ஜு முதலிய மஸ்அலாக்களும், இஸ்லாமிய ஒழுக்கம், ஸுன்னத்தின் சிறப்பு, ஸபருடைய ஒழுக்கம், இபாதத்தின் மகிமை மற்றும் சகலவிதமான போதனைகளும் அடங்கி இருக்கின்றன.

நல்ல சுத்த தமிழில் இனிய நடையில் எழுதப்பட்ட புதிய நூல் புதிய பதிப்பு. ஆங்காங்கு அரபு மொழியில் ஓதவேண்டிய கலிமா, துஆ முதலானவைகள் அரபியில் அமைக்கப்பட்டுள்ளன. இதன் அருமை நேரில் பார்த்தால் தான் தெரியும்.

கலிகோ பைண்டு கிளேஸ் காகிதம் விலை ரூ. 3-0-0

---

கிடைக்குமிடம்:—

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்,

ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸ்.

நெ. 20, ஹைரோட், திருவல்லிக்கேணி, மதறாஸ் 5.